உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

40 ] ரௌத்திரி ஆண்டு கார்த்திகைத்திங்கள் 10—12—80 [ இதழ் 1

## திருவாதிரைத் திருவிழா

13-12-80 -:- 22-12-80



திருவாதிரை நாளில் தில்லைப்பெருங் கூத்தன்

அருள் நடனம் போற்றி அல்லலறுத் தின்புறுவோம்



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—☆—

ஊனது வானவுட
லோடும் அணு காமலருள்
ஆனசிவ போகமது
வாயருள்வாய் — ஞானக்
கரும்பொருளே வாழ்மதுரைக்
கண்ணுதலே ஆர்க்கும்
அரும்பொருளே சொக்கநாதா.

—சொக்கநாத வெண்பா. 71

ஆசிரியர் :-

வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான்
சுவாமிகள்

துணையாசிரியர் :-

மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்.

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 40 || 10-12-80 || இதழ் 1

## உட்பொருள்

எண் பக்கம்



ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 10.
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 12.
ஆண்டுச் சந்தா வெளிநாடு ரூ. 18.
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 100.
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 125.

உ

சிவமயம்

தருமையாதீனம்

"ஞானசம்பந்தம்" திங்கள் இதழ்

சந்தாதாரர்களுக்கு

# ஓர் அறிவிப்பு

---

தருமையாதீனத்திலிருந்து திங்கள்தோறும் மலர்ந்து செந்தமிழ் மணமும் சிவமணமும் பரப்பி, சிவஞானத் தேன் நிறைந்து, கற்போர் கருத்தைக் கவர்ந்துவரும் "ஞானசம்பந்தம்" முப்பத்தொன்பது ஆண்டுகள் நிறைந்து நாற்பதாவது ஆண்டின் முதலிதழ் வெளி வருகிறது.

சந்தாதாரர்கள் தொடர்ந்து ஆண்டுக் கட்டணம் செலுத்தியும், புதிய சந்தாதாரர்களாகச் சேரவிரும்பு வோர் கீழ்க்காணும் முகவரிக்கு ஆண்டுக் கட்டணம் அனுப்பியும் "ஞானசம்பந்தம்" இதழைப் பெற்றுக் கற்றுப் பயனுறுவார்களாக.

வேலை மிகுதியினாலோ அல்லது மறதியினாலோ ஆண்டுச் சந்தா செலுத்துவதில் தடை ஏற்படலாம். தடையில்லாமல் "ஞானசப்பந்தம்" பெற வாய்ப்பு அளிக்கும் முறையில் ஆயுள் சந்தா ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. ஆயுள் சந்தா அறிவிப்புச் செய்தது முதல் இன்று வரையில் எழுநூற்றெண்பத்திரண்டு அன்பர் களுக்கு மேலாக ஆயுள் சந்தா செலுத்தி ஆயுள் உறுப்பினராகி உள்ளனர்.

ஆயுள் சந்தா செலுத்தினல் அவர்களது வாரிசுகளும் "ஞானசம்பந்தம்" பெற வசதி செய்து தரப்படும். மேலும் தமது ஆயுள் சந்தாவை மற்றவர்களுக்கோ கல்வி அற நிறுவனங்களுக்கோ மாற்றிக் கொடுக்க விரும்பினல் அதற்குரிய ஏற்பாடுகளும் செய்துதரப்படும்.

இவ்வரிய வாய்ப்பைப் பயன்படுத்தி ஆயுள் சந்தாதாரர்களாகச் சேர்ந்து "ஞானசம்பந்தம்" பெற்றுப் பயனடையுமாறு கேட்டுக்கொள்கிறோம். இன்றே உங்களை ஆயுள் உறுப்பினராக்கிக்கொள்ளுங்கள்.

## புதிய சந்தா விபரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | (உள்நாடு) ... | ரூ. 10—00 |
| ஆண்டுச் சந்தா | (சிலோன்) ... | ரூ 12—00 |
| ஆண்டுச் சந்தா | (வெளிநாடு) ... | ரூ. 18 – 00 |
| ஆயுள் சந்தா | (உள்நாடு) ... | ரூ. 100—00 |
| ஆயுள் சந்தா | (வெளிநாடு) ... | ரூ. 125—00 |

## விளம்பரம்

| | | |
|---|---|---|
| பின் அட்டை வெளிப்பக்கம் | 2 - கலர் | ரூ. 300—00 |
| பின் அட்டை உட்பக்கம் | 1 - கலர் | ரூ. 200—00 |
| இதழின் உட்பக்கம் | ,, | ரூ. 100 – 00 |

கட்டணம் அனுப்பவேண்டிய முகவரி :-

செயலாளர்,
ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மாயூரம் 609 001
தஞ்சை மாவட்டம்.

குறிப்பு :— காலநிலைகருதி ஆண்டுச் சந்தாத் தொகை சிறிது மாற்றப்பட்டிருக்கிறது.

ACC-NO-34363
83.4




உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 40 || ரௌத்திரி – கார்த்திகை – 10—12—80 || இதழ் 8

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ் மதுரையில் பைந்தமிழ் மாநாடு

**திருநெறியதமிழ் :**

உலகில் வழங்கும் தொன்மையான மொழிகளுள் தமிழுக்கு முதன்மையான இடம் உண்டு. வரலாற்று எல்லைக்கு அப்பாற்பட்ட காலத்திலேயே இது தோற்றங்கொண்டு வளர்ந்துவரும் சிறப்பினது. இதனைச் சிவபிரான் அகத்தியர்க்கு அறிவுறுத்தினர் என்பது சான்றோர் கொள்கை. 'தொடர்புடைய தென்தமிழைக் குடமுனிக்கு வகுத்தளித்தார் கொல்லேற்றுப்பாகர்' என்பது சிவஞான முனிவர் வாக்கு. இலக்கண இலக்கியங்களின் சிறப்பால் பெருமிதமுற்று நிற்கும் இம்மொழி, பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பாண்டிய மன்னர்களால் சங்கம் நிறுவி வளர்க்கப்பெற்றது. என்றும் மாற்றமின்றி

நிற்கும் பரம்பொருள்போல பல ஆயிரம் ஆண்டுகள் ஆகியும், தன் இளமைத்திறம் மாருது விளங்கும் தமிழ்மொழியின் சிறப்பினைப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் தம் மனோன்மணியத்தில்,

" பல்லுயிரும் பலஉலகும் படைத்தளித்துத் துடைக்கினுமோர்
எல்லையறு பரம்பொருள்முன் இருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக் கழிந்தொழிந்து சிதையாஉன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே "

என்று போற்றியுள்ளார். இவ்வாருன சிறப்பினுல் திருநெறியதமிழ் என்றும், என்றுமுள தென்தமிழ் என்றும் போற்றப்பெறும் தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகப் பாடுபட்ட சான்ருேர் எண்ணிலர். இத் மொழியில் மறைந்தனபோக எஞ்சியுள்ள பல்துறை நூல்களும் மிகப் பல. இவ்விருபதாம் நூற்ருண்டில் அச்சியந்திரத்தின் உதவியால் சாகாவரம்பெற்ற தமிழ்மொழி எல்லாத்தடைகளையும் வென்று இன்று மக்கள் நெஞ்சில் கொலுவீற்றிருக்கிறது.

## சென்னை மாநாடு :

உலகில் வாழும் நல்ல தமிழ் அறிஞர்களை அவ்வப்போது ஒன்ருகக்கூட்டி, புதிய வளங்கள் பலவற்றைச் சேர்க்கும் நோக்கில் 'உலகத் தமிழ் மாநாடுகள்' உலகின் பல பகுதிகளிலும் நடைபெற்று வருகின்றன இவ்வகையில் 1968 இல் சென்னையில் நடைபெற்ற இரண்டாவது உலகத் தமிழ் மாநாடு குறிப்பிடத்தக்க பெருஞ் சிறப் போடு நடந்தேறியது. தமிழ் அறிஞர்களுக்குச் சிலைகள் வடிக்கப் பெற்றன. திருக்குறளில் புதிய ஆய்வுகள் நிகழ்த்த மூன்று பல்கலைக் கழகங்களில் நிலைநிதி அமைக்கப்பெற்றன. தமிழின் தொன்மையும் — இனிமையும் மக்களுக்கு விளங்கும்வகையில் திட்டமிட்டு இம்மாநாடு நிகழ்த்தப்பெற்றது அரிய நூல்கள்பல உருவாக இம்மாநாடு பேருதவி யாக அமைந்தது.

## வரலாற்றில் மதுரை :

தற்போது ஐந்தாவது உலகத்தமிழ் மாநாடு உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் மதுரைமாநகரில் மிகச் சிறப்பாக நடைபெற

ஏற்பாடாகிவருவது அனைவருக்கும் மகிழ்ச்சியூட்டுவது. மதுரை, சங்கமிருந்து தமிழாய்ந்த சிறப்புமிக்க திருநகரம். செந்தமிழின் அரிய நூல்கள்பல இங்கே அரங்கேறின. தமிழின் பெருமையை உலகுக்கு உணர்த்தும் அருளற்புதங்கள் பல இந்நகரில் திருவருள்வலத்தால் நிகழ்ந்துள்ளன. அருள்மிகு மீனாட்சியின் அருளரசு நிகழும் மதுரை இதிகாச காலந்தொடங்கியே இந்திய வரலாற்றில் பெருநகராகத் திகழ்வது. இந்நகரின் சிறப்பும் பெருமையும் பெரிது. இதனை விளக்கிக்கூறும் அரிய நூல்கள் பல உள்ளன.

## மதுரைமாநாடு:

ஐந்தாவது உலகத்தமிழ் மாநாடு தமிழக அரசின் ஒத்துழைப் போடு விரிவாக நடைபெறவுள்ளது. உலகின் பல பகுதிகளிலிருந்தும் ஆயிரத்திற்கு மேற்பட்ட தமிழறிஞர்கள் தமிழாய்வு நிகழ்த்த இங்கே ஒன்று கூடுகின்றனர். ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, இவ் வாறான தமிழாய்வு மதுரை மாநகரத்தில் நடைபெற்று வந்ததை மணிவாசகர் தம் திருக்கோவையாரில் குறித்தருளுகிறார் இது, "உயர் மதிக்கூடலின் ஆய்ந்த ஒண்தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ" என்ற தொடரால் அறியப்பட்டது. இத்தகு தமிழாய்ந்த கூடலில் தண்டமிழ் அறிஞர்கள் மீண்டும் கூடுவது பொருத்தமாகவே அமை கிறது.

அரியநூல்களும், ஆராய்ச்சிக் கட்டுரைகளும் அச்சிடப்பட்டு வெளிவரவுள்ளன. கண்காட்சி, கவின்மிகு ஊர்வலம், தமிழ்ச் சான்றோர்களுக்குச் சிலைவைத்தல், கருத்தரங்குகள், இலக்கிய விழாக் கள் போன்ற பல அங்கங்களோடு நடைபெறவிருக்கும் இம்மாநாடு தமிழ்மக்களுக்குப் புதிய எழுச்சியை ஊட்டும் என்பதில் ஐயமில்லை. இலக்கியம் மற்றும் மொழிபற்றிய ஆய்வுகளோடு, விஞ்ஞானம், மருத்துவம், பொறியியல் போன்ற பிற துறைகளில் தமிழின் வளர்ச்சி களை மதிப்பிடும் வகையில் இம்மாநாடு அமைவது பாராட்டதக்கது. பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் பலவற்றைத் தமிழுக்குக்கொண்டு வரவும், தமிழிலுள்ள பல்வேறு கலைத்துறைகளைப் பிறமொழிகளில் வழங்கவும் எடுக்கப்படும் முயற்சிகள் யாவும் தமிழிற்கு அணிசேர்க்கும் அருமைப்பாடுடையன.

## தமிழ்வளர்ச்சியில் சைவம்

தமிழின் பாரம்பரியம்மிக்க இலக்கிய வரலாற்றில் சைவ — சமயத்தின் பங்கு மகத்தானது. தெய்விக மொழியாகிய தமிழின் இலக்கிய வளத்தில் சமயச்சார்பற்ற நூல்கள் மிகச்சிலவே. எனவே தமிழ்மக்களின் சமய உணர்வின் வளர்ச்சியே தமிழ் இலக்கியங்களின் வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கின்றது திருஞான சம்பந்தர் காலந்தொடங்கி இன்றுவரை சைவசமயம் தமிழ்வளர்ச்சிக்கு ஆற்றிவந்திருக்கும் தொண்டினை உலகத்தமிழறிஞர்கள் நன்கு அறிவர். இந்த நீண்ட சைவ — பாரம்பரியத்தில் கி பி. 16 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றிய திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் தமிழ்வளர்ச்சிப்பணிகள் தனித்து ஆராயத் தக்க சிறப்புமிக்கன ஸ்ரீ குருஞானசம்பந்தர் என்ற பேரருளாளரால் தோற்றுவிக்கப் பெற்ற இந்த ஞானோபதேச மரபு சைவ — வளர்ச்சி நோக்கில் தோற்றங்கொண்ட தாயினும் — சமய வளர்ச்சியோடு, தமிழ் வளர்ச்சியையும் கருத்தூன்றிப் போற்றி வந்துள்ளது.

## எதிர்நீச்சல் பணி

இன்று தமிழ்மொழி பல்வேறு சிறப்புக்களோடு பெருமிதம் பெற்றுக் கொலுவீற்றிருப்பது உண்மையே. இப்போது செய்யும் தமிழ்ப் பணிகள்யாவும் தெளிந்த நீரோடையில் நீச்சலடிப்பது போன்றதே. ஆனால் 450 ஆண்டுகளுக்கு முன்பு, மூவேந்தர் ஆட்சி மறைந்து, மொகலாய மன்னர்களது ஆட்சியால், தமிழ் தன் தொன்மை நலங் கெட்டு நிற்க, தமிழ் நாட்டின் கலை, பண்பாடு, சமயம் இவையாவும் நிலைதடுமாறித் தேய்ந்த காலம் அது. இவ்வாறான கரைபுரண்டோடிய பகைப் பேராற்றில் எதிர்நீச்சலடித்துத் தாய்மொழிகாக்கத் தமிழகத்துச் சைவாதீனங்கள் இயற்றிவந்திருக்கும் மகத்தான பணிகளை நடுநிலை அறிஞர்கள் நன்கு உணர்வர். தமிழகத்தில் மீண்டும் ஒரு இருண்டகாலம் வரலாற்றில் வாராது பாதுகாத்த பெருமை இவ்வாதீனங்களுக்கு நிறைவாக உண்டு.

## தருமையும் தமிழும் :

தருமையாதீனக் குருமுதல்வரின் சாத்திர நூல்கள்; இங்கே வாழ்ந்திருந்த அருளாளர்கள் அருளிய நூல்கள்; ஆதீனப்புலவர்கள்

எழுதிய நூல்கள்; ஆதீனம் அச்சிட்டு வழங்கிய நூல்கள் என அளவற்ற நூல்களைத் தமிழகம் இந்த ஞானப்பண்ணையிலிருந்து பெற்றுள்ளது. திருக்குறள் உரைவளம் – திருமுறை உரைநூல்கள் – சைவ – சித்தாந்த ஞானநூல்களின் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல்கள் என்றெல்லாம் 800 நூல்களை இந்நாள்வரை ஆதீனம் அச்சிட்டு வழங்கியுள்ளது. ஞானசம்பந்தம் என்ற திங்கள் இதழை 40 ஆண்டுகளாகச் சமயத் தமிழ்வளர்ச்சிநோக்கில் நடத்திவருகிறது. நூற்றுக்கு மேற்பட்ட தமிழ் அறிஞர்களுக்குப் பட்டங்கள் அளித்துத் தமிழில் அவர்களின் பணிகளை ஊக்குவித்துள்ளது. தமிழ்க்கல்லூரி ஒன்றை நிறுவி 32 ஆண்டுகளில் 1100 தமிழ்புலவர்களை உருவாக்கிப் நாடெங்கும் பணிசெய்ய விடுத்திருக்கிறது. தேவாரப்பாடசாலை வைத்துத் தெய்வத் தமிழ்வாணர்களை நூற்றுக்குமேல் உருவாக்கி வழங்கியுள்ளது. தருமையாதீனம் ஆரவாரமின்றி இயற்றிவந்திருக்கும் தமிழ்ப்பணிகளை விரிப்பின் நீளும், தொகுப்பின் எஞ்சும்.

## பாராட்டும் வாழ்த்தும் :

எனவே, ஐந்தாவது உலகத்தமிழ் மாநாடு – தமிழ்வளர்ச்சி நோக்கில் புதிய வடிவங்களைத் தமிழுக்கு வழங்கவிருப்பதறிந்து தருமையாதீனம் மகிழ்ச்சியோடு இம்மாநாட்டைச் சிறப்பாக நடந்தேற வாழ்த்துகிறது இரண்டாவது உலகத்தமிழ் மாநாட்டில், 'சித்தாந்தத் தெளிவியல்' என்ற தமிழ் நூலையும் 'The Saiva Siddhantha' என்ற ஆங்கில நூலையும் வெளியிட்டு வழங்கிய தருமையாதீனம், ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டில் 'தமிழ் வளர்க்கும் தருமபுரம்' என்ற தமிழ்நூலையும் 'St. GuruGnana Sambanda, The pholosopher inspired by Madurai' என்ற ஆங்கிலநூலையும் வெளியிட்டு மாநாட்டில் பங்கேற்கும் தமிழறிஞர்களுக்கு வழங்குகின்றது, இம்மாநாட்டைச் சிறப்பாக நடத்த ஆவன செய்துவரும் தமிழகமுதல்வர் – அமைச்சர் பெருமக்கள், ஏனையதமிழ் அறிஞர்கள் அனைவரையும் பாராட்டுவதோடு, மாநாடு சிறப்பாக நடந்தேறி தமிழ்மொழிக்கு ஆக்கம் சேர்க்க ஞானசம்பந்தம் தனது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்து மகிழ்கிறது.

'வாழிய செந்தமிழ் வாழ்கநற் றமிழர்
வாழிய பாரத மணித் திருநாடு.'

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

மாயூரம், ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றத்தின் சார்பில் தொடங்கப்பெற்ற

வாரவழிபாடு, பாலர்பள்ளி, இலவச மருத்துவமனை ஆகிய மூன்றையும் தொடங்கிவைத்து

வழங்கியருளிய

# ஆசியுரை

18—10—80

"குலங்கொடுத்துக் கோள்நீக்க வல்லான் தன்னைக்
குலவரையின் மடப்பாவை இடப்பா லானை
மலங்கெடுத்து மாதீர்த்தம் ஆட்டிக் கொண்ட
மறையவனைப் பிறைதவழ்செஞ் சடையி னானைச்
சலங்கெடுத்துத் தயாமூல தன்ம மென்னும்
தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க் கெல்லாம்
நலங்கொடுக்கும் நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே"

### பாடல் உணர்த்தும் பணிமன்றப் பணி :

ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றத்தின் கிளை இன்று மாயூரம் நகரில் தொடங்கப்பெறுகிறது. இக்கிளையின் சார்பில் வார வழிபாடு, பாலர்பள்ளி இலவச மருத்துவமனை ஆகிய மூன்றையும் இன்று மாயூரநாதரின் சந்நிதியில் தொடங்கிவைக்கின்றோம். மாயூரநாதரைத் தரிசிக்கின்றபோது, "கரவின்றி நன்மா மலர் கொண்டு......" என்று தொடங்கும் மயிலாடுதுறைப் பதிகத்தினை ஓதுவார் ஓதினார். நாம் மேற்கொள்ளும் பணிகளை மாயூரநாதர் ஆசீர்வதிப்பதுபோல அப்பாடல்களில் பணிமன்றம் செய்யும் இம்மூன்று பணிகளும் இடம் பெற்றிருக்கின்றன. அதனை எண்ணுகிறபோது மாயூரநாதரின் சந்நிதியில் தொடங்கப்பெறும் இப்பணிமன்றத்தின் செயல்களுக்கு அப்பெருமானின் ஆசிர்வாதம் நிரம்ப இருக்கின்றது என்பதைக் குறிப்பால் உணரமுடிகின்றது,

பணிமன்றம், நாடுதழுவிய ஒருபேரியக்கமாக வளர்ந்து சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் பணிசெய்வது என்பதைக் குறிக்கோளாக உடையது. அந்நிலையில் சமயப்பணியாக வாரவழிபாடும், சமுதாயப் பணிகளாகப் பாலர்பள்ளியும், இலவச மருத்துவமனையும் இன்று இங்குத் தொடங்கப்பெறுகின்றன.

"கரவின்றி நன்மா மலர் கொண்டு
இரவும் பகலும் தொழுவார்கள்"

என்று இப்பதிகத்தின் முதல் பாடல் வரிகள் அமைந்துள்ளமையால் முதற்கண் செய்யத்தக்கதாகிய வழிபாட்டு நெறிமுறையினை இவ்வரிகள் உணர்த்துவனவாகக் கொள்ளலாம். காலை, மாலை என்றில்லாமல் எப்பொழுதும் சிவசிந்தனையில் இருத்தலே வழிபாடு என்பதன் சிறந்த பொருளாகும்.

அடுத்து மூன்ருவது பாடலில், "ஊனத்திருள் நீங்கிடவேண்டில் ஞானப்பொருள் கொண்டடி பேணும்" எனும் வரிகளில் அஞ்ஞானம் நீங்கவேண்டில் ஞானப் பொருளைத் துணையாகக்கொண்டு அடிபேணுவது அவசியம் எனும் பொருள் அமைந்துள்ளது. இதனுல் இரண்டாவதாகிய கல்விப் பணியின் முக்கியத்துவம் புலனுகின்றது. ஐந்தாவது பாடல்,

"தணியார் மதிசெஞ் சடையான்தன்
அணியார்ந் தவருக் கருளென்றும்
பிணியாயின தீர்த்தருள் செய்யும்
மணியான் மயிலா டுதுறையே"

என்பதாகும். இப்பாடலில், "பிணியாயின தீர்த்தருள் செய்யும் மணியான்" என்று இறைவனைப் பிணிதீர்த்தருளும் பெம்மான் என்று சுட்டியுள்ளதால் மூன்ருவதாகிய மருத்துவப்பணியின் குறிப்பும் அமைந்துள்ளது. எனவே இன்று தொடங்கப்பெறும் இம்மூன்று பணிகளுக்கும் இறையருள் துணைசெய்யும் என்ற நம்பிக்கையுடன் இம்முப் பணிகளையும் மகிழ்வுடன் தொடங்குவோமாக.

## மக்கட்பணியே மகேசன்பணி :

இங்ஙனம் செய்யப்பெறும் சமயப்பணியும் சமுதாயப்பணியும் ஒன்ருேடு ஒன்று பின்னிப் பிணைந்து பிரிக்கமுடியாமல் இருக்கின்றன. இதனைப் பெரும்பாலோர் புரிந்துகொள்ளவில்லை என்றே தோன்றுகிறது. இன்று பலரும் எடுத்தாளும் ஒருதொடர் 'மக்கட் பணியே மகேசன் பணி' என்பதாகும். அதற்கு அவர்கள் கொள்ளும் பொருள், சமுதாயத்தில் வசதியும் வாய்ப்பும் உள்ளவர்கள் அவை இல்லாத பொதுமக்களுக்குப்பணி செய்தால் போதும்; அதுவே மகேசனுக்குச் செய்யும் பணியாகும் என்று கூறுகின்ருர்கள். மக்களுக்குச் செய்யும் பணியே மகேசன் பணி என்று நான்காம் வேற்றுமையுருபை

விரித்துப்பொருள் செய்தால்தான் அவர்கள் சொல்லும் பொருள்வரும். இயல்பாக, முதல்வேற்றுமையிலேயே வைத்துச் சொல்லுக்குப் பொருள் செய்தால் மக்கள் செய்பவேண்டிய பணியே மகேசன் பணிதான் என்ற பொருளே வரும். மீண்டும், இத்தொடரில் உள்ள சொற்களை முன்னும் பின்னுமாக மாற்றிச் சிந்தித்தால் மகேசன் பணி மக்கள் பணியேதான் என்ற பொருளும்வரும். இத்தொடரில் இருபொருளும், அமைந்துள்ளமை சிந்திப்பார்க்குச் சிறந்ததோர் விருந்தாம். முன் சொன்ன பொருளில் ஆறுமுகநாவலர், “இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது கடவுளை வழிபட்டு முத்தி இன்பம் பெறுதற் பொருட்டே யாம்” என்று வேத ஆகமத் திருமுறைகளின் துணைகொண்டு அறிவுறுத்தினர் ‘எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால் மனித்தப் பிறவியும் வேண்டுவதே!’ என அப்பர் அறிவிப்பதும் இக்கருத்துப் பற்றியதேயாம்.

## இருவருக்கும் கடமை உண்டு :

உலகம் முழுவதும் படைத்துக், காத்து அழித்து, மறைத்து அருளுகின்ற ஐந்தொழில்களைச் செய்தலே ஆண்டவன் மக்கட்குச் செய்யும் பணியாகத் திகழ்கிறது. மகேசன்பணி ஐந்தொழில்களைச் செய்தலே எனக் கொள்ளலாம் அதுமட்டுமின்றி, ஆண்டவன் கண்ணுக்குப் புலனாகாமல் இருந்து மக்களுக்கு எல்லா வசதிகளையும். அல்லும் பகலும் அனவரதமும் செய்துகொண்டேவருகின்றான் இந்தக்கருத்தும் அந்தத்தொடரிலேயே அமைந்துள்ளது. எனவே மக்கள் மகேசனுக்குப் பணி செய்வதும் மகேசன் மக்கட்குப் பணி செய்வதும் இத்தொடரால் குறிக்கப்பெறுகின்றன. உலகியலில் முதலாளிக்கும் ஒருபணி உண்டு; ஒரு கடமை உண்டு. அதே போலத் தொழிலாளிக்கும் ஒரு பணி உண்டு; ஒரு கடமை உண்டு. முதலாளியின் கடமை தன்னைச் சார்ந்து வாழும் தொழிலாளிக்குக் குறைகள் வராமல் பார்த்துக் கொள்வதாகும். தொழிலாளியின் கடமை தன்னைக் காப்பாற்றும் முதலாளிக்கு வஞ்சனையில்லாமலும் தூய அன்போடும் பணிசெய்துவருதலாகும். இருபாலரும் தத்தம் கடமையினைச் சரிவரச் செய்தால் ஒருவரது கடமை மற்றொருவருக்கு உரிமை ஆகிவிடுகிறது இந்தநிலையை வைத்து அப்பரடிகள்,

“ தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே ”

என்று அருளிச் செய்கின்றார்.

## நாட்டைக் காக்கும் நல்லறக் கோயில்கள் :

நம்முடைய சமயத்தில் சமுதாயப் பணிகள் பலவகையிலும் கலந்திருக்கின்றன. திருக்கோயில்களை எடுத்துக்கொள்வோம், திருக்கோயில் நூற்றுக்கணக்கான பணியாளர்களுக்கு வாழ்வளித்து வருகின்றது.

இதனுல் கோயில் சமுதாயத்திற்குப் பயன்படுகிறது எனலாம். இது உலகியல்நிலை. அருளியல் நிலையில் கோயில்கள் தொட்ட தொட்ட இடமெல்லாம் சமுதாய முன்னேற்றமே குறிக்கோளாகக் கொண்டு இயங்கிவருகின்றன என்பதைச் சிந்தித்துப் பார்த்தால் நன்கு புலனுகும். இசைக்கலை, சிற்பக்கலை, நாட்டியக்கலை, ஓவியக்கலை, போன்ற நாட்டின் பண்டைய கலைகளின் வாழ்விடமாகவும், வளரிடமாகவும் திருக்கோயில்கள் அமைந்துள்ளன. திருக்கோயிலில் ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன என்ருல் அவை ஆண்டவனுக்காக அல்ல; அவனியில் இருக்கும் அத்துணை உயிர்களின் வாழ்க்கைக்காகவே என்பதை உணர்தல் தகும்.

## ஆலையைப்போல் ஆலயம் :

உதாரணமாக ஒருநூற்பாலையை எடுத்துக்கொண்டால் அதில் ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் பணியாற்றுகின்ருர்கள். அவ்வாலையில் பணிசெய்வதால் அத்தொழிலாளிகளின் வாழ்வும் வளம் பெறுகின்றது; அதேசமயம் நாட்டு மக்களுக்கு நல்லாடைகள் பெற வழியும் பிறக்கின்றது. இதைப்போலவே திருக்கோயில்களும் அங்குப் பணிசெய்யும் மக்களுக்கு வாழ்வளிப்பது மட்டுமின்றி நாட்டிலே வாழும்மக்கட்குப் பயன்படுவதைப் புரிந்துகொள்ளலாம். நூற்பாலையிலிருந்து கிடைக்கும் பலன்கள் கண்ணுக்குத் தெரிவதுபோல, திருக்கோயில்களின் பயன்கள் அங்ஙனம் கண்களுக்குப் புலப்படாது; என்ருலும் அவை கற்ருேரின் கருத்துக்குப் புலனுகும் என்பது வெளிப்படை. ஆலைத்தொழிலாளிகள் பணிமுடக்கம்செய்தால் பொருள் உற்பத்தி குறைந்து நாடு கேடுறுகிறது. தொழிலாளிகளும் துன்புறுகின்றனர். அதேபோல் ஆலயத்தில் பூசைமுறைகள் சரியாக நடைபெருவிட்டால் நாட்டில் பஞ்சம் பட்டினி தாண்டவமாடும். இக்கருத்துப்பற்றியே திருமூலரும்,

“ முன்னவனுர் கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னம் களவு மிகுத்திடும் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத்தானே ”

என அருளிச்செய்துள்ளார்.

திருக்கோயில்களில் நடைபெறும் பூஜை, தோத்திரம், தியானம், ஜபம், போன்றவற்ருல் நாடுமுழுமைக்கும் நன்மை விளைவதும், தாவரம் முதல் தேவர்கள் வரை எல்லாத் தரப்பிலும் வளம் சேர்வதும் ஆன்ருேர்களின் நெஞ்சுக்குப் புலனுகும் உண்மைகளாகும். எனவே அனைத்துயிர்களும் வாழவேண்டும் என்றபெருநோக்கில் தான் நமது முன்னேர்கள் பக்தியுணர்வோடு அன்ருடம் வழிபாடு நிகழும் திருக்கோயில்களைப் போற்றிப் பாதுகாத்து வந்துள்ளனர்.

ஆகவே எந்தச்செயலைச் செய்தாலும் இறைவழிபாட்டுடன் தொடங்குவது நமது முன்னோரின் வழக்கமாக இருந்துவருகிறது. அவ்வழக்கத்தில் தான் இன்று இறைவழிபாடும், பாலர்பள்ளியும் இலவச மருத்துவமனையும் மாயூரநாதரின் மாலை வழிபாட்டுடன் தொடங்கப் பெறுகின்றன.

**ஐந்தொழிலில் அமைந்த அற்புத உண்மை :**

இறைவனை நாம் வழிபடுவதும் இறைவன் ஐந்தொழில்களை உயிர்களுக்காகச் செய்வதும் எந்த நோக்கத்தில் அமைந்துள்ளன என்பது சிந்தித்தற்குரியது. இறைவனை வழிபடுவது ஏன்? என்றால் நமது நலத்திற்காகத்தான் என்று நம்மில் பலருக்கு ஓரளவேனும் தெரிந்திருக்கும். ஆனால் தனக்கொன்றும் தேவையில்லாத இறைவன் ஏன் ஐந்தொழில்களைச் செய்கின்றான் என்பது விடைகாணும் நிலையில் உள்ளது. இறைவன் ஐந்தொழில்களைச் செய்வதில் ஓர் உண்மை பொதிந்திருக்கிறது. எல்லாவிதமான வசதிகளையும் உடைய ஒருவன் வசதியற்றுத் தாழ்ந்த நிலையிலிருக்கும் மக்களுக்கும் ஏனைய உயிர்களுக்கும் பல்லாற்றானும் துணையாகவும் உபகாரியாகவும் இருந்துவர வேண்டும் எனும் கருத்தினை உணர்த்தும் நிலையில் ஆண்டவன், தன்னைவிடத் தாழ்ந்த உயிர்களின் ஈடேற்றம் குறித்துத் தனு, கரண, புவன, போகங்களைக் கொடுத்து ஐந்தொழில்களைப் பெருங்கருணையுடன் செய்தருளுகின்றார். இக்கருத்தில்தான் அப்பரடிகள்,

> "சலங் கெடுத்துத் தாயமூல தன்மம் என்னும்
> தத்துவத்தின் வழிநின்று தாழ்ந்தோர்க்கெல்லாம்
> நலங் கொடுக்கும் நம்பி"

என்று நள்ளாற்றிறைவனைப் பாடியருளுகின்றார்.

ஆண்டவன் பெருங்கருணைத் திறமுடையவன் ஆதலின் 'தாழ்ந்தோர்க்கெல்லாம் நலம் கொடுக்கும் நம்பி' என்றார். பிறருக்கு உதவ வேண்டும் என்னும் கருணையே அதாவது தயை என்னும் அருங்குணமே அறத்திற்கு மூலமாகும்; அதாவது அடிப்படையாகும், ஆதலின் அதனை உடையவன் எனும் பொருளில் "தயா மூல தன்மம் என்னும் தத்துவத்தின் வழி நின்று" என்று அருளுகின்றார்.

எனவே பொருள் நிலையிலும் சமுதாய நிலையிலும் தாழ்ந்திருப்போர்க்கு உதவுதலே உண்மையான அறம் எனும் கருத்தில் அமைந்துள்ள இவ்வரிகளை இப்பணி மன்றத்தின் குறிக்கோளாகக் கொண்டு, பணிமன்றத்தில் பணி புரியும் அன்பர்கள் நலிந்தோரைக் காப்பாற்றும் நல்ல பணியில் ஈடுபடுவார்களாக. இப்பணி மன்றத்தில் வழிபாடு, கல்வி, மருத்துவம் என்ற முப்பெரும் பணிகளைப் பயன் கருதாது செயற்படுத்த முன்வந்துள்ள மாயூரநகரப் பெருமக்கட்கும் இவ்விழாவில் பங்கேற்கும் அன்பர்கட்கும் எல்லா நலமும் பெருகச் செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

வளர்க சமய சமுதாயப் பணி!

# திருவாஞ்சியம்,
# திருநன்னிலத்துப்பெருங்கோயில்
## தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், திருவாசக உரைமணி,

**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ.,**

தஞ்சைமாவட்டத்தில் நன்னிலம் தாலூகாவில் இத்தலங்கள் இரண்டும் உள்ளன.

## 1. திருவாஞ்சியம்

இத்தலம் மாயூரம்-திருவாரூர் புகைவண்டித்தொடரில் நன்னிலம் நிலையத்திலிருந்து மேற்கே 11 கி. மீ. தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உள்ளது. நன்னிலம் பேருந்து நிலையத்திலிருந்து குடவாசல் செல்லும் பேருந்தில் புத்தாற்றின் வடகரையில் 7 கி. மீ. தூரம் சென்றால், இத்தலத்தில் இறங்கலாம். நன்னிலம் கும்பகோணம் பேருந்தில் செல்லுவோர் அச்சுதமங்கலத்தில் இறங்கித் தெற்கே 1 கி. மீ. தூரம் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

### இத்தலத்தின் மறுபெயர்கள்

ஸ்ரீவாஞ்சியம், வாஞ்சியபதி, சந்தனவனம், ஜாந்தாரண்யம், பூகைலாசம், திருவறையூர் என்பன.

### தலப்பெருமை

திருவாஞ்சியம் காசிக்குச்சமமாகச் சொல்லப்படும் ஆறுதலங்களில் ஒன்று. ஏனைய தலங்கள் திருவெண்காடு, திருவையாறு மாயூரம், திருவிடைமருதூர், திருச்சாய்க்காடு ஆகிய ஐந்துமாம். திருமால் சிவபெருமானைப் பூசித்துத் திருமகள் தம்மிடம் வாஞ்சையுடன் இருக்குமாறு வரம்பெற்ற திருத்தலம். இத்தலத்திலுள்ள குப்தகங்கை கங்கையிற் புனித தீர்த்தமாகும். கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகளில் முழுகுவது சிறப்பு. இயமன் வழிபட்டதலம். இவ்வூரில் இயமனுக்குத் தனிக்கோயில் உள்ளது. இவ்வூரில் இறப்பவர்களுக்கு இயமவாதனை இல்லை. சுவாமியை இயமன் வாகனமாகத்தாங்கும் பெருமையைப் பெற்றுள்ளான். இயமவாகனம் இக்கோயிலில் உள்ளது.

பிரமதேவன், இந்திரன், பராசரர், அத்திரி, மகுடவர்த்தனன், மாதனுவு, சாருமதி ஆகியோர் வழிபட்ட பெருமைக்குரியவர் அருள்மிகு வாஞ்சிநாதர்.

மூவர்பாடிய தேவாரத்திருப்பதிகங்களையும் மணிவாசகர் பாடிய திருவாசகத்தொடரையும், திருக்கோவையார் பாடலையும் பெற்றுள்ளது. சேக்கிழார் பெரியபுராணத்தில் இத்தலத்தைக் குறித்துள்ளார். அருணகிரிநாதர் மற்றும் அருளாளர்பலரது புராண இலக்கியங்களும் தோத்திரங்களும் இத்தலத்துக்கு உள்ளன.

சொல்ல முத்திதரும் தலங்களில் ஒன்ருகத் தருமையாதீன முதற் பெருங்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் இத்தலத்தைக் குறித்துள்ளார்.

தில்லைவனம் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனம் கூடல் முதுகுன்றம் - நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றம்மறைக் காடு அருணை காளத்தி
வாஞ்சியம்என் முத்தி வரும்.

என்பது அவர்கள் திருவாக்கு. இப்பதினைந்து தலங்களும் தலப் பெயரைக் கூறி அவ்வத் தலப்பெருமானை நினைந்து வழிபட்டாலே முத்திகிடைக்கும் என்பது இப்பாடல் கருத்தாகும். இத்தலத்திற்கு வடக்கே திருவீழிமிழலை, சிறுகுடி ஆகியனவும், கிழக்கே நன்னிலம், திருக்கொண்டீச்சரம் ஆகியனவும், தெற்கே திருத்தலையாலங்காடு, திருப்பெருவேளூர் ஆகியனவும், மேற்கே குடவாயில், நாலூர்மயானம், திருச்சேறை ஆகியனவும் உள்ளன.

## கோயிலமைப்பு

கிழக்குப்பார்த்த சந்நிதி. பெரியகோயில். மூன்று பிராகாரங்கள் உள்ளன. ஐந்து நிலைகளை உடைய அழகிய இராஜகோபுர வாயிலைக் கடந்து உள்ளே சென்ருல் எமதர்மராஜாகோயில் உள்ளது. இத் தலத்தில் முதல் வழிபாட்டுக்குரியவர் இவர். மேற்குப்பிராகாரத்தில் நந்திதேவர் கிழக்குநோக்கி இருக்கிருர். இவர் கருவறுத்ததேவர் (பிறவி நோய் தீர்ப்பவர்) எனப்படுகிருர். வடக்குப் பிராகாரத்தில் இத்தலத் துக்குப் பெருமைதரும் குப்தகங்கை பெரிய திருக்குளமாகத் திகழ் கிறது. தென்கரையில் கங்கைவிநாயகர் விளங்குகிருர். நந்தவனத்தில் தலமரமாகிய சந்தனமரங்கள் நிரம்பவுள்ளன. வடகிழக்கு மூலையில் அமைந்த புஷ்யமண்டபத்தில் நூலகம் உள்ளது.

மூன்று நிலைகளை உடைய இரண்டாம் கோபுரவாயிலின் இரு புறமும் சித்திவிநாயகர் பாலமுருகன் திருக்கோயில்கள் உள்ளன. இரண்டாம்கோபுரவாயிலைக்கடந்தவுடன் அம்பாள்கோயில் உள்ளது.

அடுத்து ஆடிப்பூர அம்மன் கோயிலும் அலங்கார மண்டபமும் உள்ளன. முன்மண்டபத்தில் கொடிமரமும் நந்தி பலிபீடங்களும் உள்ளன.

நட்டுவன் பிள்ளையாரை வணங்கி இரண்டாம் பிராகாரத்தை வலம்வந்து மூன்ருவது கோபுரவாயிலைக் கடந்து செல்லவேண்டும். கோபுரவாயிலில் விநாயகர் முருகன் ஆகியோர் விளங்குகின்றனர். கோபுரவாயிலின் குடவறையில் அதிகார நந்திதேவர் எழுந்தருளி யுள்ளார். அவரை வழிபட்டு உள்ளே செல்வோம்.

இப்பிராகாரத்தில் சோமாஸ்கந்தர்சந்நிதியிலுள்ள வெண்ணெய்ப் பிள்ளையாரை வழிபட்டு வலம் வரலாம். தெற்குத் திருமாளிகைப் பத்தில் அறுபத்துமூவர் உள்ளனர். தக்ஷிணாமூர்த்தி தனிக் கோயிலில் விளங்குகின்ருர். பின்புறம் கிழக்குநோக்கி, காசிவிசுவ நாதர் சந்நிதி உள்ளது. மேற்குப்பிராகாரத்தில் கன்னிவிநாயகர் சந்திர மௌளீசுவரர் பைரவர் சந்நிதிகளும். வள்ளி தெய்வயானை சமேத ஆறுமுகரும், பஞ்சபூதலிங்கங்களும், கஜலக்ஷ்மியும், கைலாசநாதரும், சனிபகவானும் உள்ளனர். வடக்குப்பிராகாரத்தில் காசிக்குச்சமமாகச் சொல்லப்படும் தலலிங்கங்கள் உள்ளன. கர்ப்பகிருகக் கோஷ்டங் களில் தெற்கே தக்ஷிணாமூர்த்தி, மேற்கே இலிங்கோற்பவர், வடக்கே பிரமன் துர்க்கை ஆகியோர்களும் உள்ளனர். கிழக்குநோக்கித் தனி துர்க்கைகோயில் உள்ளது. மகிடனேடு போரிடும் இத்துர்க்கையின் திருவுருவம் தனிச் சிறப்புடையது. இப்பிராகாரத்தில் சண்டேசுவரர் கோயில் உள்ளது. ஆனந்தகூபம் இங்கு இருக்கின்றது. ஈசான மூலையில் நடராசர் மண்டபம் விளங்குகிறது. கிழக்கே யோகபைரவர், சூரியன், இராகு, கேது, திருவுருவங்கள் உள்ளன.

வலமாகவந்து முன்னேயுள்ள மகாமண்டபத்தை அடைவோம். ஆனந்தவிநாயகரைத் தரிசித்து ஸ்நபனமண்டபத்தை அடையலாம். இங்கு உற்சவமூர்த்திகள் விளங்குகின்றன. சந்நிதியிலுள்ள நந்தி தேவரை வழிபட்டு, துவாரவிநாயகரைத் தொழுது இறைவன் சந்நி தியை அடைவோம். துவாரபாலகர்கள் இருவர், திருச்சந்நிதியின் இருபுறமும் உள்ளனர். சுவாமி சுயம்புமூர்த்தி. அவர்தம் புகழைப் போலவே சுவாமி பெரிய திருவுருவத்தோடு காட்சிதருகிருர்.

வாஞ்சியநாதரை நால்வர் அருளிய தேவார திருவாசகத் திருப் பாடல்களை ஓதி வழிபடுவோம்.

வன்னிகொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம்
பொன்னியன்ற சடையில் பொலிவித்த புராணனூர்
தென்னஎன்று வரிவண்டுஇசை செய்த திருவாஞ்சியம்
என்னையாளுடையான் இடமாக உகந்ததே.

என்பது ஞானசம்பந்தர் தேவாரம் புராணனுர் என்று தேவாரத் திருமுறை கூறுவதுபோல, பெருமான் மிக்க பழமையோடு விளங்குவதைக் காணலாம். அருள்நலம் கொழிக்கும் அத்திருமேனியை வழிபட்டு அம்பாள்சந்நிதியை அடைவோம். அருள்மிகு மங்களநாயகியின் கருணைகூர் முகமும் திருவடிகளும் நம் உள்ளத்தைக் கவர்வதை உணர்ந்து போற்றுவோம். இறைவன் திருவாஞ்சியத்தில் சீர்பெற இருந்து மருவார் குழலியோடு மகிழ்ந்து விளங்கும் அருட்காட்சியைக் கண்டு அருள்பெறுவோம்.

### மூர்த்திகள்

இறைவன்திருப்பெயர் அருள்மிகு வாஞ்சிநாதர். கிரேதாயுகத்தில் – இரத்தினமயமாகவும் திரேதாயுகத்தில் – பொன்வண்ணமாகவும், துவாபரயுகத்தில் - வெள்ளிமயமாகவும், கலியுகத்தில் - சிலைவடிவாகவும் இவர் விளங்குவதாகப் புராணங்கள் கூறும். வேண்டுவார் அன்போடு வேண்டுவதை நல்குவதால் வாஞ்சிநாதர் (வாஞ்சை - அன்பு) என இவருக்குப் பெயர்வழங்குகிறது. இறைவி திருப்பெயர் வாழவந்தநாயகி.

இத்தலக் கோயிலில் விளங்கும் எமதருமராஜா, யோகபைரவர் அல்லது ஆரணபைரவர், துர்க்கை மிக்கசிறப்புடையமூர்த்திகளாவர். தலமரம் சந்தனம். தீர்த்தம் குப்தகங்கை, யமதீர்த்தம், ஆனந்தகூபம் ஆகியனவாம்.

## புராணவரலாறுகள்

### தீர்த்தச் சிறப்பு

இங்குள்ள குப்தகங்கை, அத்திரி, பரத்துவாசர், ஜமதக்கினி, விசுவாமித்ரர், வசிட்டர், கௌதமர் ஆகியோர் நிறுவியருள்பெற்றசிறப்புடையது. இறைவன் முத்தலைச் சூலத்தினுல் உண்டாக்கப்பட்டது. காசியில் கங்கை தன்னிடம் மக்கள் போக்கிக்கொள்ளும் பாவங்கள் தீர வந்து தங்கி இறைவன் தீர்த்தம் கொடுக்கும் சிறப்பால் உய்தி பெற்ற சிறப்புடையது. நான்கு யுகங்களில் முறையே புண்ணிய தீர்த்தம் அத்திரிதீர்த்தம், பராசரதீர்த்தம், முனிதீர்த்தம் என்ற பெயர்களைப்பெற்றது. கார்த்திகை ஞாயிற்றுக்கிழமைகளில் இறைவன் இந்தத் தீர்த்தம் கொடுத்தருளுகிருர். பல்லாயிரவர் வந்து நீராடி இறைவனை வழிபட்டு நலம் பெறுகின்றனர். பஞ்சமா பாதகம், பிரமகத்தி, நோய்கள், பிறபிடைகள், சிவத்துரோகம் முதலிய பாவங்கள் அனைத்தையும் நீக்கி, வெற்றி ஆனந்தம் வீடுபேறு முதலிய பயன்களை அளிக்கவல்லது. இத்தீர்த்தக்கரையில் தருமம் செய்வோர் சிறந்த பலனைப் பெறுவர்.

மெய்தரு கயநோய் குட்டம் விளைத்தமுற் கொடியசாபம்
பெய்துறல் செய்யும் வன்கண் பிரமராக் கதம்வே தாளம்
எய்திடின் அன்ன தீர்த்தம் இழிந்ததிற் படியத் தீரும்
செய்திரும் கடத்தின் ஏற்றுத் தெளிக்கினும் தீரு மன்றே.

முன்னிய கருமம் முற்றும் முரணிய வினைகள் நீங்கும்
துன்னிய பகைமு ருக்கித் தொலைப்பவோர் சுபமும் எய்தும்
பொன்னியல் முளரிச் செய்ய பூமகள் அகலாள் என்றும்
பன்னிய வினைய தெய்வம் பைந்தடம் படிந்து ளோர்க்கே.

என்பது இத்தீர்த்தத்தின் சிறப்பைக் கூறும் பாடல்கள்.

பராசரமுனிவர் வீரதனு மன்னனைப் பற்றியிருந்த பிரமகத்தியைப் போக்கியசிறப்பால் இத்தீர்த்தம் அம்முனிவர்பெயராய் விளங்குகிறது.

அத்திரிமுனிவர் நீராடித் தத்தாத்திரேயரை மகவாகப் பெற்ற சிறப்பால் அத்திரி என வழங்கப்படுகிறது.

## திருமால் திருமகளை வேண்டிப்பெற்றது

பூமகள் திருமகள் இருவர்க்கும் ஏற்பட்ட போராட்டத்தால் திருமகள் திருமாலைவிட்டுப் பிரிந்தாள் என்றும், திருமால் திருவாஞ்சியத்தை அடைந்து வழிபட்டு நலம் உற்றார் என்றும், திருமால் திருமகளை வாஞ்சித்துப் பெற்றதால் திருவாஞ்சியம் எனப் பெயர் பெற்றதென்றும் தலபுராணம் கூறும்.

உரோமசமுனிவர் தவம் செய்து முத்திபெற்ற வரலாறு புராணத்தில் கூறப்படுகிறது. திருமால் வழிபட்டுத் திருமகளை அடைந்ததோடு காத்தல்தொழிலைப்பெற்றார். நான்முகன்வழிபட்டுப் படைத்தல் தொழிலைப் பெற்றார். இந்திரன் சாபம் நீங்கப்பெற்றான்.

## இயமன் வழிபட்டது

இயமன் எல்லா உயிர்களையும் கொன்று உயிர்களைக் கவரும் தன் பாவம்தீர இத்தலத்து இறைவரை வழிபட்டுப் பாவம் நீங்கப்பெற்று இறைவனுக்கு வாகனமாகும் பேற்றையும் பெற்றான். இயமனுக்கு மூலஸ்தானம் தனியே இருக்கிறது இறைவன் இயமனுக்குக் காட்சி வழங்கி அருள்புரிந்த ஐதிகத் திருவிழா மாசி மாதம் நிகழ்கிறது. இத்தலத்தில் வாழ்கிறவர்களுக்கு எமவாதனை வயிரவ வாதனைகள் இல்லை எனப் புராணம் கூறுகிறது. இங்கு இறப்போர் வலச்செவியில் இறைவன் ஐந்தெழுத்து ஓதிச் சிவலோகத்தில் சேர்ப்பித்துக்கொள்கிறான் எனவும் தலபுராணம் கூறுகிறது.

## மன்னரும் முனிவரும்

மருடவர்த்தனன் என்னும் மன்னன் பகைவர்களால் உண்டாகும் அச்சம் நீங்கப்பெற்ருன். மகாதனு என்ற மன்னன் அரக்க உருவம் நீங்கி ஆனந்த வடிவமுற்ருன். விருட்சி என்பவன் மனைவி சாருமதி கயநோய் நீங்கப்பெற்ருள். தர்மத்துவசன் என்ற வணிகன் நற்கதி எய்தினுன்.

இறைவன் கயிலையிலிருந்து இத்தலத்திற்கு வந்ததால் அம்பிகை வாழவந்த தேவியாக இத்தலத்திற்கு எழுந்தருளி வந்து அருள் பாலிக்கிருள் என்ற செய்திகள் தலபுராணத்தில் காணப்படுகின்றன.

## இலக்கியச் சிறப்பு

மூவர் தேவாரமும் பெற்ற சிறப்பு இத்தலத்திற்கு உரியது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் அருளிய பதிகங்கள் ஒவ்வொன்று உள்ளன. மேலும் மணிவாசகரும் கீர்த்தித்திருவகவலில்,

திருவாஞ்சியத்தில் சீர்பெற இருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்

என இத்தலத்தைக் குறித்துள்ளார். திருக்கோவையாரில் 268 ஆம் பாடலிலும் இத்தலத்தைக் குறிப்பிட்டருள்கிருர். அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ் 2 உள்ளன. தலபுராணங்கள் வடமொழியிலும் தமிழிலும் உள்ளன. தமிழில் தலபுராணம் பாடியவர் களந்தைக் குமரன் ஆவார். சிவராமசுந்தரம் பிள்ளை மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ் உள்ளது. இராமலிங்க சுவமிகள் பாடலும், முத்துசாமிதீட்சிதர் கீர்த்தனையும் உள்ளன.

ஸ்ரீ குருஞானசம்பந்தர் சிவபோகசாரத்தில் முத்தித்தலங்களில் ஒன்ருக இதனைக் குறித்தருளுகின்ருர். திரு. க. கலியாணம்பிள்ளை எம்.ஏ அவர்கள் எழுதிய தலவரலாறு தேவஸ்தானத்தில் அச்சில் உள்ளது.

## திருவிழாக்கள்

நாடோறும் கோலபூஜைகள் நிகழ்கின்றன. ஆடிப்பூரம், கார்த்திகை ஞாயிறு, மாசிமகம், முதலிய சிறப்பு விழாக்கள் நடைபெறுகின்றன.

## கல்வெட்டு

இக்கோயிலில் இருபத்தேழு கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஏழு பிற்காலச் சோழர்களதும் ஏழு பாண்டியர்களுடையனவும், ஒன்று நாயக்கரதுமாம். திருவாஞ்சியம்

குலோத்துங்க சோழவளநாட்டில் பனையூர் நாட்டில் திருவாஞ்சியம் எனக்கூறப்பட்டது. இவ்வூருக்கு ராஜகம்பீர சதுர்வேதி மங்கலம் என்ற மறுபெயர் உண்டு. நிலவிற்பனை, நிலதானம், வரி தள்ளுபடி இவைகளைப் பற்றிக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. இரண்டாம் ராஜராஜதேவன் கல்வெட்டு ஒன்று கோயிலில் சேர்ந்த நிலங்களின் வரிசையைக் கூறுகிறது. இவ்வரசன் காலத்தில் அம்மனுக்கு ஒரு கோயில் கட்டப்பட்டு, பிரதிட்டையும் செய்யப்பட்டது. அப்போது நிலமும், வீடும் தானம் செய்யப்பட்டன. குலோத்துங்கன்காலத்தில் திருப்பள்ளியறை நாச்சியாருக்குக் கோமங்குடியான் ஒருவன் நிலதானம் செய்தான். மங்களாம்பா கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டின்படி II இராசராசதேவன் காலத்தில் (கி. பி. 18) திருவாஞ்சியமுடையார் கோயிலில் அம்மனுக்கு ஒரு கோயில்கட்டிப் பிரதிட்டை செய்யப்பட்டது. அப்போது நிலம் வீடுகள் தானம் செய்யப்பட்டன. ஒரு நிலத்தில் இருந்த கல்வெட்டின்படி சிதம்பரத்துப் பிச்சைமடத்து அகோர சிவாச்சாரியார் சீடர் அச்சுற்றமங்கலத்து பெருமாநாயனூர் பண்டாரம் அம்மடத்திற்கு முண்டுவான்சேரியில் ஒருவேலி நிலம் வாங்கியதாகக் கூறப்பெற்றுள்ளது.

## 2. திருநன்னிலத்துப்பெருங்கோயில்

மாயூரம் – திருவாரூர் புகைவண்டித்தொடரில் இரயில் நிலயமாக உள்ளது. ஊர் இரயில், நிலயத்துக்கு மேற்கே 5 கி. மீ. தூரத்தில் உள்ளது. மாயூரம், கும்பகோணம், திருவாரூர் முதலிய இடங்களிலிருந்து நன்னிலம் வரும் பேருந்துகளில் வருவது எளிதான வழி. பேருந்துநிலயத்துக்கு அருகில் கோயில் உள்ளது.

இத்தலத்துக்கு வடமொழியில் மதுவனம், தேவாரண்யம், சுந்தராவனி, பிருகத்புரம் எனப் பெயர்கள் வழங்குகின்றன. வளமான நல்லநிலங்களை உடைய ஊராதலின் நன்னிலம் எனப்பெற்றது.

### தலப்பெருமை

கோச்செங்கட்சோழன் கட்டிய மாடக் கோயில்களில் ஒன்று 'திருநன்னிலத்துப்பெருங்கோயில்' எனத் தேவாரத்துள் இக்கோயில் குறிப்பிடப்படுகிறது.

"கோச்செங்கணான் செய்கோயில் நாடிய நன்னிலத்துப் பெருங் கோயில்", "செம்பியர்கோன் நரபதி நன்னிலத்துப் பெருங்கோயில்" என்பன இத்தலக் கோயிலைக் குறித்தருளும் தேவாரத் தொடர்கள். இத்தலம் சுந்தரர் அருளிய ஒரு திருப்பதிகத்தைப் பெற்றுள்ளது. அசுரர்களால் விளைந்த துன்பங்களைத் தாங்காமல் தேவர்கள் தேனீக்களாக மதுவனம் என்னும் இத்தலத்தில் தங்கி இறைவனை வழிபட்டனர் என்பது இத்தலப்புராண வரலாறு. கதிரவன்பூசித்ததலம். சூரியபூசை நாட்களில் மக்கள் சிறப்பு வழிபாடுகள் புரிகின்றனர்.

### மூர்த்திகள்

இறைவன் திருப்பெயர் அருள்மிகு பதிவனேசுவரர். பிரகாசநாதர், தேவாரண்யேசுவரர் எனவும் வழங்கப்பெறுகிறார். இறைவிதிருப் பெயர் அருள்மிகு பெரியநாயகி, பிரகாசநாயகி, தேவகாந்தாரநாயகி எனவும் வழங்கப்பெறுகிறார். விநாயகர், முருகன், தக்ஷிணாமூர்த்தி சந்நிதிகள் சிறப்புடையன. கோயிலுக்கு அடிவாரத்தில் விளங்கும் மகாதேவரும் அகத்தீசுவரரும் சிறப்புடைய மூர்த்திகள். தலமரம் – வில்வம். தீர்த்தம் – பிரமதீர்த்தம்.

### கோயிலமைப்பு

கிழக்குநோக்கியசந்நிதி. அருகில் பிரமதீர்த்தம் உள்ளது. கோயில் செங்கல் திருப்பணி. நுழைவாயிலைக் கடந்தவுடன் நந்தி பலிபீடங்கள் உள்ளன. கீழே ஒரு பிராகாரமும் மலைமேல் ஒரு பிராகாரமும் உள்ளன. கீழே உள்ள திருச்சுற்றில் அம்பாள் கோயில் தெற்கு நோக்கி உள்ளது. தெற்குப் பிராகாரத்தில் தக்ஷிணாமூர்த்தியும் தென் மேற்குத்திசையில் விநாயகரும் மேற்கே விநாயகரும் வடமேற்கே கஜலக்ஷ்மியும் உள்ளனர். வடக்கே சண்டீசுவரர்கோயில் உள்ளது. கிழக்கே அகத்தீசுவரர் கோயிலும், தனியே மகாதேவரும் விளங்குகின்றன. மலையின்மேல் சோமாஸ்கந்தர் மண்டபம் தனியே உள்ளது. வடக்கே கோஷ்டதுர்க்கை கோயில் உள்ளது. உற்சவமூர்த்திகள் பழமையானவை. பாதுகாப்புக்காக வேறு கோயிலில் வைக்கப்பெற்றுள்ளனர்.

## வரலாற்றுக் குறிப்பு

### கோச்செங்கட்சோழன்

திருவானைக்காவில் சிலந்தியாயிருந்து இறைவனை வழிபட்ட தவப்பயனால் கோச்செங்கட்சோழராகப் பிறந்தவர். தமிழ்நாடு முழுதும் எழுபது மாடக்கோயில்களைக் கட்டியவர். சங்ககாலத்தில் பொய்கையார் பாடிய களவழி நாற்பது பாடல்களைக் கேட்டு சிறைப் படுத்தியிருந்த கணைக்கால் இரும்பொறையை விடுதலை செய்தவர். தென்னவனாயுலகாண்ட செங்கணாற்கு அடியேன் என அறுபான் மும்மை நாயன்மார்களுள் ஒருவராகச் சுந்தரர் இவரைப் போற்றுகிறார். சங்ககாலச் சோழமன்னர் இவர்.

### பெருங்கோயில்

நன்னிலம்ஊர்ப்பெயர். பெருங்கோயில்கோயிற்பெயர். இறைவன் எழுந்தருளிய கோயில்கள் மாடக்கோயில், பெருங்கோயில், கரக் கோயில், ஞாழற்கோயில், கொகுடிக்கோயில், இளங்கோயில் ஆலக் கோயில் முதலிய எழுபத்தெட்டு பெயர்களால் வழங்கப்பெறும் எனத் திருநாவுக்கரசர் அருளிச்செய்கின்றார். " பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும், பெருங்கோயில் எழுபதினோடு எட்டும் மற்றும்,

கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில், கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில் " என்பது அப்பாசுரம். இத்தலக்கோயில் பெருங்கோயில் எனப்படும். கோயில் அண்மைக்காலத்தில் புதுப்பிக்கப்பட்டுப் பொலிவோடு விளங்குகிறது. தலத் தேவாரத்திருப்பதிகம் சுவரில் எழுதப்பெற்றுள்ளது.

## புராணவரலாறுகள்

இத்தலத்தில் திருப்பணிதானங்கள் திருவிழாக்கள் செய்பவர் எல்லா நன்மைகளையும் எய்துவர் எனவும் ஏனைய புண்ணியகாலங்களிலும் ஏகாதசியில் பிரதோஷகாலத்திலும் வழிபடுவோர் எல்லாச் செல்வங்களையும் பெறுவர் எனவும் மதுவன மகாத்மியம் கூறுகிறது.

### பிருகத்புரம்

யமுனநதிக்கரையில் சோமபுரி எனும் நகரில் அரசாண்ட பிருகத் என்னும் சந்திரவம்சத்து அரசன் இத்தலத்தில் தங்கிஇறைவனை வழிபட்டு நல்லருள்பெற்று வசந்தத்திருவிழா நிகழ்த்தி, திருப்பணிகள் புரிந்தான் எனவும் அவன்பொருட்டு இறைவன் உண்டாக்கிய தீர்த்தம் பிருகத்கங்கை எனப்பட்டது என்றும் கூறப்படுகிறது.

### தேவாரண்யம்

சலந்தராசுரனுடைய கொடுமைகளுக்கு அஞ்சி, தேவர்கள் பெண்வடிவங்கொண்டு இத்திருத்தலத்தில் இறைவனைச்சரணடைந்து வாழ்ந்தனர். இறைவன் தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி இத்தலத்தினருகில் உள்ள விற்குடியில் சலந்தராசுரனைக் கொன்று தேவர்களுக்கு நல்வாழ்வு அருளினர். தேவர்கள் அடைக்கலமாகத் தங்கி வாழ்ந்ததால் தேவாரண்யம் எனவும் தீர்த்தம் தேவதீர்த்தம் எனவும் பெயர்களைப் பெற்றன. தேவதீர்த்தத்தில் மாசிமாதம் நீராடி இறைவனை வழிபடுவோர் எல்லா இன்பங்களையும் அடையலாம்.

### மது தீர்த்தம்

விருத்திராசுரனல் துரத்தப்பட்ட தேவர்கள் மறைந்து வாழ முற்பட்டனர். சுந்தராவனி என்னும் இத்தலத்தை அடைந்து வாழ்ந்தனர். இத்தலத்தின் சோலைகளையும் நீர்நிலைகளையும் பார்த்து, தேனீக்களாக மாறி நாடோறும் இறைவனை வழிபட்டுவந்தனர். இறைவன் இந்திரனைக்கொண்டு விருத்தராசுரனைக் கொல்வித்து, தேவர்களுக்கு நல்வாழ்வு அருளினர். தேவர்கள் வாழ்ந்த நந்தவனம் மதுவனம் எனவும், மது ஒழுகி ஓடி நிறைந்த தீர்த்தம் மதுதீர்த்தம் எனவும் பெயர் பெற்றன. அகத்தியர் வழிபட்டமூர்த்தி அகத்தீசுவரர் எனப் பெயர்பெற்றார்.

### தேவப்பிரதிஷ்டை

தெற்கில் எமனும், மேற்கில் வருணனும் கிழக்கில் இந்திரனும், வடக்கில் குபேரனும் இலிங்கங்கள் அமைத்துப் பூசித்ததாகத் தல புராணம் கூறுகிறது.

உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

## நாற்பதாம் ஆண்டில் நடைபோட்டுவருகிறது

தித்திக்கும் சிவஞானம் தமிழ்கு ழைத்துத்
தெவிட்டாத நல்லமுதாய் வழங்கும் ஏடு

முப்பத்து ஒன்பது ஆண்டுக் கால
முறையான வளர்ச்சியினுல் பெருமை பெற்று

நாற்பதாம் ஆண்டுக்குப் பணி தொடங்கி
நடைபோட்டு வருகிறது ஏந்திக் கொள்வீர் !

பத்தோடு பதினென்ருய்ப் பிறந்தி றக்கும்
பரிதாப ஏடுகளைப் போல வன்றிச்

செந்தமிழின் இளமையைப்போல் வீறு கொண்டு
சிந்தைக்குத் தமிழ்த்தேனைச் சைவப் பாங்கைச்

சோராக எடுத்தியம்பி அடக்கத் தோடு
செழித்துவரும் தமிழேடு இதுவே யன்ருே ?

ஞானசம் பந்தத்தைத் தமிழர் வாழ்வின்
நாகரிகப் பண்பாட்டுத் தீபந் தன்னைப்

போற்றிடுக ! தமிழ்மக்கள் வாழ்க்கை எல்லாம்
பொலிந்திடுக ! திருவருளே நிறைந்து வாழ்க !

வற்ருத கங்கையைப்போல் உலகில் எங்கும்
வளஞ்சுரக்க ! சிவனருளே ஆட்சி கொள்க !

இரா. செல்வக்கணபதி, தருமபுரம்.



கட்டுரை எண். 11.

# அபிராமி அந்தாதி

புலவர். திரு. K. சந்தானராமன், M A, B. Lit., D. P. P. A., D. U. N. I. U.

கருத்தன, எந்தைதன் கண்ணன, வண்ணக் கனகவெற்பிற்
பெருத்தன, பால்அழும் பிள்ளைக்கு நல்கின, பேர்அருள்கூர்
திருத்தன பாரமும், ஆரமும், செங்கைச்சிலையும் அம்பும்
முருத்தன மூரலும் நீயும் அம்மே! வந்துஎன் முன்நிற்கவே. (9)

அ. கருத்தன, எந்தைதன் கண்ணன வண்ணக் கனக வெற்பிற் பெருத்தன.

(1) பொன்மலைகள் எனப் பெருத்த, அழகிய திருமுலைகள் எந்தை சிவபெருமானின் சிந்தையில் நிற்பன. அவரது கண்களெனச் சிறப்புடையன.

(2) 'எந்தைதன் கருத்தன, எந்தைதன் கண்ணன' என்று 'எந்தைதன்' என்ற சொல்லைச் சேர்த்துப்பொருள்கொள்ளவேண்டும். இதனை 'இடைநிலைத் தீவக அணி' என்பர். இவ்வணி இப்பாட்டில் அமைந்ததன் சிறப்பைப் பாடலின் முடிவுரை விளக்கத்தில் நாம் காண்போம்.

(3) பரஞானம், அபரஞானம் என்னும் இருவகை அறிவே அம்பிகையின் திருமுலைகள் என முன்னரே கண்டோம். அவ்விரு வகை ஞானங்களும் இறைவனின் கருத்தில் எப்போதும் நிலைநிற்பதால் 'எந்தைதன் கருத்தன' என்றார்.

(4) சிவபெருமான் அவ்விரு ஞானங்களையும் கண்ணெனக் கருதுவதால் - மிக அருமையானவையாகக் கருதுவதால் 'எந்தைதன் கண்ணன' என்றார்.

(5) சந்திர சூரியர்களே அம்பிகையின் திருமுலைகளாகும் என்ற கருத்தும் உண்டு. அச்சந்திர சூரியர்களே இறைவனின் கண்கள். நெற்றிக் கண் 'அக்னி' யாகும். இறைவனின் கண்களாகஇருக்கும்

சந்திர சூரியர்களே அன்னையின் திருமுகங்களாக அமைவதாலும் 'எந்தைதன் கண்ணன' என்றார்.

(6) சிவபெருமானின் நெற்றிக்கண் காமனையும், முப்புரங்களையும் எரித்தன. அவ்வாறே பர அபர ஞானங்களாகிய அறிவுக்கனல் அறியாமை, காமக்குரோதம் முதலிய குற்றங்களை அழிக்கும். ஆகவே எந்தைதன் கண்போன்றவைகள் ஆயின.

(7) பர அபர ஞானங்கள் அளவில் மிகப் பெரியனவாகும். அதாவது மலைபோல் பெரியனவாகும். ஆகவே 'வெற்பிற் பெருத்தன' என்றார்.

(8) உருவத்தால் மட்டுமின்றி அழகாலும் மதிப்பாலும் அந்த ஞானங்கள் உயர்ந்தவைகள் ஆகும். ஆகவே 'வண்ணக் கனக வெற்பிற் பெருத்தன' என்றார்.

(9) சிவபெருமானின் சிந்தையில் நிற்கும் அத்திருமுலைகளி னின்று சுரந்தபாலமுதம் உலகிற்குப் பெரும் ஞானாசிரியரை அளித்த பெருங்கருணையினை, அடுத்த சொற்றொடரில் குறிப்பிடப்போகிறார். அப்பேரருளுக்கு ஏற்ப முன்னரே 'வண்ணக் கனக வெற்பிற் பெருத்தன' எனப் பெருமைபடப் பேசுகிறார்.

## ஆ பால் அழும் பிள்ளைக்கு நல்கின.

(1) சீர்காழிக் குளக்கரையில் அழுத மூன்றுவயதுக் குழந்தை யாகிய ஞானசம்பந்தப் பெருமானுக்கு ஞானப்பாலை அளித்தனவாகும் அத்திருமுலைகள்.

(2) அவளது திருமுலைகள் யாரும் வாய்வைத்து உண்ணாத 'உண்ணாமுலைகள்' அல்லது 'அபீத குசங்கள்' ஆகும். அதற்கேற்ப 'நல்கின' என்றார்.

(3) அழுத பிள்ளையாகிய சம்பந்தருக்கு அவள் பால்கொடுத்ததி லிருந்தே "அழுத பிள்ளை பால் குடிக்கும்" என்ற பழமொழி உருவாகியது.

(4) மற்றும் அன்றும் இன்றும் என்றும் பசியால் அழும் இளங் குழந்தைகளுக்குப் பாலூட்டும்படித் தாயின் மார்பகத்தில், உரிய காலத்தில் பாலினை நல்கி அருள்செய்திருக்கிறாள். ஆகவே பொதுவாக 'பால் அழும் பிள்ளைக்கு நல்கின' என்றார். குட்டிபோட்டுப் பால் கொடுக்கும் உயிரினங்கள் அனைத்திலுக்கும் இது பொருந்தும்.

(5) அபிராமிபட்டர் ஞானசம்பந்தருக்குத் திருமுலைப்பால் அளித்ததையே குறிப்பிட்டார் என்பது தெளிவு. எனினும், ஆதி சங்கரர் குழந்தையாய் இருக்கையில் பசி யெடுத்தபொழுது அம்பிகையே வந்து ஞானப்பால் அளித்ததாகவும் வரலாறு உண்டு.

(6) ''உனது திருமுலைப்பாலுண்ட ஒரு 'திராவிட சிசு' (திராவிடக் குழந்தை) கவிஞர்களுக்குள்ளே தலைசிறந்த கவிஞர் ஆனர்'' என்று ஆதிசங்கரரின் சௌந்தரியலகரியில் கூறப்படுகிறது. 'திராவிடசிசு' என்றது ஞானசம்பந்தரையே என்பது பெரும்பாலோர் கருத்து. தன்னையே சங்கரர் 'திராவிடசிசு' எனக் குறிப்பிட்டார் என்பாரும் உளர்.

(7) ''கவுணியர்க்குப் பால் சுரந்த கலசம் போற்றி'' எனத் திருவிளையாடல் புராணம் கூறுகிறது.

(8) ''நீதி மறைக்குல சந்ததிக்கு உணப் பால் கொடுத்தாள்'' என்றும்,

''கொங்கை வள்ளத்துப் பால் கிண்ணத்திலே சைவக் கன்றுக்கு வார்த்தவள்'' என்றும்,

''சந்தன பாரத்தனம் பிதிரோடத் தமிழ்மறைச் சம்பந்தன் அவா வறப் பால்கொடுத்தாய்'' எனவும்,

சிங்கை நமச்சிவாயப் புலவர் தன் உலகம்மைக் கலித்துறை அந்தாதியில் மூன்று இடங்களில் கூறி மகிழ்கிருர்.

(9) வேல் கொடுத்தாய் திருச் செந்தூரருக்கு,
அம்மியின் மீதுவைக்கக்
கால் கொடுத்தாய் நின் மணவாளருக்கு,
கவுணியர்க்குப்
பால் கொடுத்தாய், மூவர் பயப்பட மத
வேளுக்குச் செங்
கோல் கொடுத்தாய் அன்னையே! எனக்கு
ஏதும் கொடுத்திலையே!''

என அவள் அருட்கொடையினைப் பழம்பாடலொன்று புகழ்கிறது.

(10) காமாட்சி சுப்ரபாதமும் சம்பந்தருக்குப் பால்கொடுத்ததைக் கூறுவதோடல்லாமல், அவளது திருமுலைப்பாலுண்ட குழந்தை முருகன் இறைவனுக்கே திருச்செவியில் பிரணவோபதேசம் செய்த பெருமையினையும் குறிப்பிடுகிறது.

(11) "உரைப்பார் உரைக்கும் கலைகளெல்லாம்
எண்ணில் உன்னையன்றி
தரைப்பால் ஒருவர் தரவல்லாரோ? தண்தரளமுலை
வரைப்பா லமுது தந்தெனை வாழ்வித்த மாமயிலே!"

எனக் கப்பன் தனது சரசுவதியந்தாதியில் கலைமகளின் தண்தரள முலைவரைப் பாலமுதே தன்னை வாழ்வித்ததென்று போற்றுகிறான்.

(12) எல்லாவற்றுக்கும்மேலாக ஞானசம்பந்தரே 'போதையார் பொற்கிண்ணத்து அடிசில் பொல்லாதெனத் தாதையார் முனிவுறத் தான் எனை ஆண்டவன்" என அவள் பாலளித்த செய்திகளை அகச் சான்ருகவே கூறக் காண்கிறோம். "அடிகளார் உண்டருளியது பாலே ஆயினும் அதிற்குழைத்த உணவு ஞானம் ஆதலால் 'அடிசில்' எனப்பட்டது. 'ஞானபோனகர்' எனச் சேக்கிழார்சுவாமிகள் வழங்குவதாலும் அறிக" என்னும் குறிப்பு தேவாரம் தருமையாதீனப் பதிப்பில் விளக்கம் தரப்பட்டிருக்கிறது.

(13) அபிராமிபட்டர் தனது பதிகத்தில் தன்னையும் "கந்தனுக்கு இளையன் என்று கருதி நினது திருமுலைப்பாலமுதம் தந்திடில் நினக்குக் குறையாகுமோ?" என வேண்டுகிறார்.

## இ. பேரருள் கூர் திருத்தனபாரம்

(1) மேற்கண்டவாறு ஞானசம்பந்தருக்குப் பால்நல்கிப் பேரருள் கூர்ந்த திருமுலைகள்.

(2) அழுத பிள்ளைக்குப் பாலளித்துச் சாதாரண வயிற்றுப் பசியினைமட்டும் தீர்க்காது ஞானப் பசியினையே தீர்த்துவிட்டதால் தனபாரம் 'பேரருள்கூர் திருத்தனபாரம்' எனப்பட்டது.

(3) "சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்"

என்று சேக்கிழார் பெருமான் கூறுவதுபோல ஞானப்பால் பருகிய அந்நிலையிலேயே அனைத்து ஞானங்களும்—உணர்வரிய மெய்ஞ் ஞானம் ஈருக அவர் உணர்ந்தார். அவற்றினை அம்மே! அப்பா! என்று அழைத்த அளவில் எழுந்தருளிவந்து அளித்ததால் 'பேர் அருள்கூர் திருத்தனபாரம்' என்ருர்.

(4) ஆளுடைய பிள்ளைக்கு அன்னை திருமுலைப்பால் அளித்தது சைவ சமயத்துக்கும் தமிழ்நாட்டிற்குமே ஒரு திருப்புமுனை

யாகவே அமைந்துவிட்டது! பதினாறே ஆண்டுக்குள் பல்லாயிரம் பாடல்கள்! பற்பல அற்புதங்கள்! பரசமயம் வேரறுத்துப் பாண்டியன் பிணி தீரவும் அருளியது! இன்னோரன்ன அரும்பணிகளை நான் மறையின் தனித்துணையாய் நின்று, பாலரு வாய்ப் பாலகனாய் நின்று சாதித்தது! 'பெம்மான் இவனென்று' இறைவனைச் சுட்டிக்காட்டிய முதல்ஞானாசிரியராய்த் திகழ்ந்தது ஆகிய அனைத்துக்கும் திருமுலைப் பால் உண்டதே அடிப்படையாகியது ஆகவே அவ்வருட்பாலை அளித்த தனபாரம் 'பேரருள்கூர் தனபாரம்' எனப்பட்டதில் வியப்பில்லை!

(5) மற்றும் சரவணத்துக்கு ஏகிச் சண்முகனுக்குத் தன் திருமுலைப்பால் அளித்த சமயம் அப்பால் சிதறும்படிசெய்து, அப்பொய்கையில், பராசரின் சாபத்தால் மீன்களாக வாழ்ந்துவந்த அவரது குமாரர்களுக்கு மீண்டும் தம்முருவே அருளினாள். சண்முகனுக்கு ஞானப்பாலளித்ததோடு நில்லாமல் முனிகுமாரர்களுக்கும் சாப விமோசனம் கிடைக்கச் செய்தாள். அவர்களுக்கு அப்பால் சிதறல் கிட்டும்வண்ணம் சரவணப்பொய்கைக்கு எழுந்தருளினாள். பேரருள்கூர் திருத்தனபாரமாதலின் அதுவும் நிகழ்ந்தது.

ஈ, **ஆரமும் செங்கைச் சிலையும் அம்பும்**
**முருத்தன மூரலும் நீயும் வந்து அம்மே!**
**என் முன் நிற்கவே.**

(1) "அத்தன பாரத்தின்மீது அசையும் முத்தாரமும், சிவந்த கரங்களில் ஏந்திய கரும்புவில், புஷ்பபாணங்களுடனும், மயில் தோகையின் அடிப்பாகம் போன்ற புன்முறுவலுடனும் என்முன் எழுந்தருளி வந்து நிற்பாயாக" என வேண்டுகிறார்.

(2) ஞானப் பசியெடுத்த காழிப்பிள்ளையார் அம்மே! அப்பா! என்றே அழைத்தார். அவர் வரலாறு குறிக்கப்பெறும் இப்பாடலில் அபிராமிபட்டரும் 'அம்மே!' என்ற சொல்லாலேயே அழைப்பது ஓர் அற்புத அமைப்பு.

(3) அம்பிகை திரிபுரசுந்தரி கோலத்தில் கரும்புவில்லும், மலர்க்கணைகளும் தரித்திருக்கிறாள். சீகாழி பிரமபுரீசுவரரின் நாயகி திருநிலை நாயகி என்னும் திரிபுரசுந்தரியன்றோ?

(4) அன்னையில் பல்வரிசைக்கு அல்லது புன்முறுவலுக்கு அபிராமிபட்டர் மயிலிறகின் அடிப்பாகத்தை உவமையாகக் கூறுகிறார். பொதுவாக முத்துப்போன்ற பல் அல்லது முத்துக்கோத்தாற் போன்ற முறுவல் என்றே கூறுவது மரபு. ஞானசம்பந்தர் முருகப் பெருமானின் அவதாரம் என்றே கருதப்படுவதால் அவரை நினைந்த பொழுது பட்டரின் சிந்தையில் முருகனின் மயிலும், தோகையும் அதன் அடிப்பாகமும் தோன்றியிருக்கக் கூடும்.

(5) அன்னையின் புன்முறுவலினைக் காஞ்சி மூககவி "மந்தஸ்மித சதகம்" அல்லது 'முறுவல் நூறு' என்னும் நூறுபாடல்களில் வருணிக்கிறார்.

(6) "சுத்த வித்தை யென்னும் சோடசாட்சரி (பதினாறு எழுத்துள்ள அன்னையின் மந்திரம்) அமைந்தது போன்ற இரண்டு பல் வரிசைகளை யுடையவள்" என லலிதா சகஸ்ரநாமம் வருணிக்கிறது.

(6-A) 'சாருஹாசா' (அழகிய புன்சிரிப்புள்ளவள்) எனவும், தரஹாஸோஜ்ஜ்வலன்முகி (புன்சிரிப்பால் பிரகாசிக்கும் முகமுடையவள்) எனவும், 'மந்தஸ்மிதப்ரபாபூர மஜ்ஜத் காமேச மானஸா (காமேசனின் மனது மூழ்கிவிளையாடும் பிரவாகம்போன்ற புன்முறுவல் உள்ளவள்) எனவும் பலவாறு வருணிக்கிறது லலிதா சகஸ்ரநாமம்.

(7) சிங்கை நமச்சிவாயர் தனது உலகம்மை கலித்துறையந்தாதியில் "மூரற் குறுமுளை நித்தில வல்லி" எனக் குறிப்பிடுகிறார்.

(8) ஆளுடையபிள்ளைக்கு அருளிய பெரிய நாயகியினையும், சீர்காழி திரிபுரசுந்தரியினையும் போல அபிராமியாகிய நீயும் என்முன் வந்து காட்சிதந்தருள வேண்டும் என்ற குறிப்பில் 'நீயும்' என்றார்.

## உ. நம் வீட்டுக் குழந்தைகளும் ஞானசம்பந்தர்கள் ஆகலாம்!

"தவ சஸ்தந்யம் மன்யே தரணிதர கந்யே ஹ்ருதயத:
பய: பாராவார: பரிவஹதி ஸாரஸ்வத மிவ
தயாவத்யா தத்தம் திரவிடசிசு: ஆஸ்வாத்யதவ யத்
கவீனும் ப்ரௌடாநாம் அஜநி கமநீய: கவயிதா"

என்ற சுலோகத்தில் அன்னை ஞானசம்பந்தருக்குத் திருமுலைப்பால் தந்த செய்தியினை ஆதிசங்கரரின் சௌந்தரியலகரி குறிப்பிடுகிறது. இச்சுலோகத்துக்கு விளக்கம் கொடுக்கும் பிரும்மஸ்ரீ தேதியூர் சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள் நம் வீட்டுக் குழந்தைகளும் சிறுவயதிலேயே அரிய ஞானம் எய்தும் வழியினை விளக்குகிறார்.

அதாவது, அன்னையின் வடிவினைத் தியானித்து மேற்கண்ட சுலோகத்தைப் பாராயணம் செய்துகொண்டு பசும் பாலில் 'ஐம்' எனும் பீஜாட்சரத்தை எழுதி, தேவியினுடைய திருமுலைப்பாலாகவே அப்பசும்பாலை எண்ணி. குழந்தைகளுக்குக் கல்வி தொடங்கும் பொழுது (விஜயதசமியன்று அட்சராப்பியாசம் செய்யும்பொழுது) அவர்களைப் பருகச்செய்து தொடங்கினால் அக்குழந்தைகள் சிறுவயதிலேயே மஹாவித்வான்கள் ஆவார்கள் என விளக்குகிறார்.

வடமொழிப் பயிற்சியில்லாதவர்களும், அபிராமி அந்தாதியில் 'கருத்தன எந்தைதன் கண்ணன..................' என்று தொடங்கி இப்பாடலைப் பாராயணம்செய்து (குறைந்தது பதினாறு முறைகள்) தேவியின் பீஜாட்சரத்தைப் பசும்பாலில் எழுதிக்கொடுத்து அதே பயனை எய்தலாம்.

சித்திரைத் திருவாதிரையில் சீர்காழியில் நடைபெறும் திருமுலைப் பால் விழாவின்போது இன்றும் பால் பிரஸாதமாக வழங்கப்படுகிறது. நாமும் தேவையான பசும்பால் எடுத்துச்சென்று, திருமுலைப்பால் விழாவில் நிவேதித்து எடுத்துவரலாம். "திருமுலைப்பால் உண்டார் மறுமுலைப்பால் உண்ணார்" என்பது பழமொழி. அதாவது அப்பிரஸாதத்தினை உண்டவர் இனிப் பிறவா முத்திநிலை எய்துவர் என்பது கருத்து.

ஊ. இப்பாடலிலேயே தீபாராதனை !

தெய்வீக நூல்களைப் பாராயணம் செய்யும் பொழுதும், பிரசங்கம் செய்யும் பொழுதும் மிகமுக்கியமான நிகழ்ச்சிகளான திருவவதாரம், திருக்கல்யாணம், திருமுடிசூட்டு (பட்டாபிஷேகம்) போன்ற கட்டங்களில் தீபாராதனை காட்டுவது நமது சம்பிரதாயம்.

முன்னரே குறிப்பிட்டபடி ஞானசம்பந்தப்பெருமான் திருமுலைப் பாலுண்ட நிகழ்ச்சி சைவ உலகிலும், சாக்த உலகிலும் மிகமிக முக்கியமான நிகழ்ச்சியாகும்.

அந்நிகழ்ச்சியினைக்குறிப்பிடும் இப்பாடலில் தீபாராதனை அமைந்திருக்கிறது ! ஆம் !

"கருத்தன எந்தைதன் கண்ணன" என்ற இடத்து இடைநிலைத் தீவக அணி அமைந்திருப்பதாகக் கண்டோம். விளக்கின் ஒளி முன்னும் பின்னும் வீசுவதுபோல, இடையில் இருக்கும் ஒரு சொல் முன்னும் பின்னும் இருக்கும் சொற்களுடன் சேர்ந்து பொருள் தரும் அணியே இடைநிலைத்தீவக அணி என அணி இலக்கணம் கூறும். அதனை வடமொழியில் "மத்திம தீப அலங்காரம்" என்பர்.

ஞானப்பிள்ளையார் திருமுலைப்பாலுண்ட நிகழ்ச்சியினைக் குறிப்பிடும் சமயம் தீபாராதனை காட்டுவது அவசியந்தானே !

அபிராமி அந்தாதி ஓர் அருட்பாமாலை என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்காட்டு.

இப்பாடலின் பாராயணபலன் குழந்தைகள் சிறுவயதில் ஞானம் பெறுதலும், பிறவாமுத்திநிலை எய்துதலும் ஆகும்.

# தேன் கசக்குமா?

தருமையாதீனப்புலவர், தமிழாகரர்,

டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பிஎச். டி.

**தேன் கசக்குமா ?**

ஆம்; தேன் கசக்கும்; கரும்பும் துவர்க்கும், இப்படிக் கூறினல் எல்லோரும் ஒப்புக்கொள்வார்களா? உறுதியாக ஒப்புக் கொள்ளமாட்டார்கள். கரும்பும், தேனும் இனிப்பது குழந்தையர் முதல் கிழவர் ஈருக அனைவர் அநுபவமும்கூட. அதனுல்தான் எல்லார் உள்ளமும் இதனை மறுக்கும். நம்முடைய நாக்குத்தான் நமக்கு அளவுகோல். அதனைவைத்து எடுத்த முடிவுதான் இது. நம்நாக்கின் சுவைக்கு மேல் அளவுக்கு மீறிய சுவை ஒன்று அது என்ற உணர்வு வரும்வரை கரும்பு இனிக்கும்; தேன் இனிக்கும். அந்தச் சுவை அனுபவம் வந்துவிட்டாலோ கரும்பும் துவர்க்கும்; செந்தேனும் புளிக்கும்; கசக்கும்.

**அப்பர் அறவுரை :**

திருவிடைமருதூரிலே திருநாவுக்கரசர் சிவபிரானைப் பணிந்து பரவுகின்ருர்; அருந்தமிழ்ப்பதிகம் பாடுகின்ருர்; அவர் பெற்ற இன்ப அநுபவம் அந்தப் பதிகம் முழுவதுமே பாய்ந்து பெருக்கெடுத்தாலும் ஒருதிருப்பாட்டில் வெளிப்படையாக அடையாளம் காட்டுகிறது.

"கனியினும், கட்டிபட்ட கரும்பினும்,
பனிமலர்க்குழற் பாவை நல்லாரினும்,
தனிமுடிகவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந்தார்க்கு இடைமருதனே."

— அப்பர் - 1214

மனிதர்களையெல்லாம் அழைத்து இந்த அநுபவத்தை எடுத்துரைத்து எல்லோரையும் ஆற்றுப்படுத்தவேண்டும் என்ற கருணை அடிகளார் உள்ளத்தில் மேலும் பெருகுகின்றது. உலகம் வாழவேண்டும் என்ற

ஒப்பற்ற உயர்நோக்கம் உடைய அருளாளரன்றோ! முழங்குகின்றார் பிறிதொரு திருப்பாட்டிலும் :

"மனிதர்காள்! இங்கேவம் ஒன்று சொல்லுகேன்
கனிதந்தாற் கனி உண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசன் எனுங்கனி
இனிது சாலவும் ஏசற்றவர் கட்கே" — அப்பர் - 1970

"தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர் உள்ளத் தேறல்" (அப்பர் - 1972) சுவைத்த திருவுள்ளமாதலின் இந்தக் கருணை நமக்காக முழங்குகின்றது.

தம் நாவிற்குச் சுவையூட்டும் பொருள்களை நுகர்வதிலேயே காலத்தை வீணாக்குவது பெரும்பான்மையான மாந்தர் நிலை. உயர்ந்த பேரின்பத்தை அநுபவிக்கும் மாந்தர் சிலரே. அவர்கள் சென்ற நெறியில் சிந்தனை செலுத்தினாலன்றோ அந்த அநுபவத்தை நாமும் பெறமுடியும்.

"ஊன்நோக்கும் இன்பம் வேண்டி உழலாதே
வான்நோக்கும் வழியாவது நின்மினோ" — அப்பர் - 1560

இது அடிகளார் அறவுரை.

## அலங்காரம் செய்த அருணகிரியார் :

முருகனுக்குத் தமிழால் அலங்காரம்செய்து மகிழ்ந்த அருளாளர் அருணகிரிநாதர். திருநாவுக்கரசர் முதலிய பழந்தமிழ்ச் சான்றோர் சென்ற நெறியிலே சிந்தை மலர்ந்து சென்ற இப்பெரியார் முருகன் திருவருளில் மூழ்கி எடுத்த முத்துக்கள் திருப்புகழ் ஆரமாகத் திகழ்கின்றன. மந்திரப் பனுவலாகக் கந்தர் அநுபூதி அருளியவர். அலங்காரத்தில் ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு கருவூலம். ஒன்று அறவுரை பேசும்; மற்றொன்று வீரம் தெறிக்கும்; பிறிதொன்றில் உள்ளம் உருகும்; வேறொன்றில் கற்பனை சுடர் ஒளிவீசும்; இன்ப அநுபவத்தை எடுத்து உரைக்கும் ஒருபாட்டு; திருநாமங்களைப் பக்திபரவசத்தோடு அடுக்கும் ஒருபாட்டு; வடமொழி நாமங்களைச் சரளமாகத் தொடுக்கும் மற்றொரு பாட்டு. இவற்றுள் தம் இன்ப அநுபவம் எடுத்துரைத்து மகிழும் ஒருபாட்டு இங்கு நம் சிந்தனைக்கு ஏற்றதாகும்.

**கரும்பும் துவர்க்கும்; தேனும் கசக்கும்:**

" பெரும் பைம்புனத்தினுள் சிற்றேனல்
காக்கின்ற பேதை கொங்கை
விரும்பும் குமரனை, மெய்யன்பினால்
மெல்ல மெல்ல உள்ள
அரும்பும் தனிப் பரமானந்தம்;
தித்தித்து அறிந்தஅன்றே
கரும்பும் துவர்த்துச் செந்தேனும்
புளித்து அறக் கைத்ததுவே. "

— கந்தரலங்காரம் - 6

உண்மையான அன்பினால் மெல்லமெல்ல முருகப்பெருமானைத் தியானம் செய்யச்செய்ய ஒப்பற்ற மேலான இன்பம் உள்ளத்துக்குள்ளே தோன்றும்; அதனைச் சுவைக்க அறிந்த அந்தவிநாடியிலேயே கரும்பு துவர்க்கும்; செந்தேன் புளிக்கும்; கசக்கும். இந்தப் பேரின்பம் தமக்குக் கிட்டிய பேற்றை எடுத்துரைக்கின்றார் இவ்வருளாளர்; நோக்கம் யாது? எல்லோரும் அதனைப் பெற்றிடவேண்டும் என்ற பெருங்கருணைதான்! உலகியற் சுவைகள் எல்லாம் ஒன்றும் இல்லாமற் போய்விடுகின்றன; ஏன்; மேலான பேரின்பச் சுவையன்றோ அநுபூதியாகிவிடுகிறது!

" ஒளியில் விளைந்த உயர்ஞான
பூதரத்து உச்சியின்மேல்
அளியில் விளைந்ததொர் ஆனந்தத்தேனை "

— கந்தரலங்காரம் - 8

அநுபவித்ததனால் வந்த மாற்றம் இது.

ஆனந்தக் கடலாக உள்ள முருகப்பெருமானோடு இரண்டறக் கலக்கப் பக்தித்துறையிலே இறங்கினராம் அடிகளார்; புத்தி அலைகள் தெளிந்து தமக்கு அந்நிலை உறுதியாகவேண்டும் என்றும் அவாவுகின்றார்:

" பத்தித்துறை யிழிந்து, ஆனந்த வாரி படிவதினால்
புத்தித் தரங்கம் தெளிவதென்றோ? "

— அலங்காரம் - 35

அடிகளார் உண்ட அமுதச் சுவையே ஒரு பாட்டில் மேலும் தெளிவாகின்றது:

" பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு
தோள்களுமாய்த்
தித்தித்திருக்கும் அமுது கண்டேன் "

— அலங்காரம் - 47

அதனால், " பரமானந்த சாகரத்தே " வீழ்ந்து இன்பம் துய்க்கும் தம் நிலையை அத்திருப் பாட்டிலே புலப்படுத்துகின்றார்.

## சொல்லவொண்ணா ஆனந்தம் :

இப்படியெல்லாம் கூறினாலும் அதனை முற்றச் சொல்லியதாக ஆகவில்லை என்பது அடிகளார் திருவுள்ளம். கரும்பு, தேன் என்று இவ்வாறெல்லாம் அளவிட்டுக் கூறுவது பின் எதற்கு ? உலகியலில் வீழ்ந்திருக்கும் நம் போன்றோர்க்கெல்லாம் விளங்குவதற்காகத்தான்.

" போக்கும் வரவும் இரவும் பகலும்
புறமும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லா
தொன்று வந்துவந்து
தாக்கும் மனோலயம் தானே தரும்
எனைத்தன் வசத்தே
ஆக்கும் அறுமுகவா ! சொல்லொணாது
இந்த ஆனந்தமே "

( அலங்காரம் - 73 ).

என்ற திருப்பாட்டு ஒன்றே இதற்குச் சான்று பகரும்.

## உள்ளுணர்வு வேண்டும் ;

இவ்வாறு அருளாளர்கள் கூறும் செய்திகள் நமக்குக் காட்டுவது யாது ? இறையடி ஞானமே பேரின்பமாகும் என்ற ஒன்றே ஆகும். அதனைப் பெறுவதற்கு முயலவேண்டும் என்ற உள்ளுணர்வு இவற்றைப் பயிலும்போது நமக்கு உண்டாகவேண்டும் ; அது தோன்றாத வரையில் இவற்றை வீணே படிப்பது ஒன்றே போதாது ; அந்த நிலைக்குச் சென்றால் நாமும் 'தேன் கசக்கும்' என்று கூறலாம் ; செல்வோமா ?



# திருவாதவூரர் வாழ்வும், 

#  திருவாசக உண்மையும்.

வித்துவான். திரு. மு. வைத்தியநாதன், திருச்சி.

**திருவாசகம் :**

மாணிக்கவாசகர் அருளிய அருள்ஞானநூல் திருவாசகம். இன்று வாழும் மக்கள் திருவாசகம் என்றவுடன், அது ஒரு பக்திச்சுவை யுடைய நூல் என்று கருதுகின்றனர். அதில் நிறைந்து காணப்படும் பிறசுவைபற்றி அறிந்துணரும் நிலையில் இல்லை. இளைய தலைமுறை யினர் திருவாசகத்தை, மனித வாழ்வின் இறுதிக்காலத்தில் பாட வேண்டிய பாடல்களின் தொகுப்பு என்று நினைக்கின்றனர். திரு வாசகம் வையகத்தில் வாழ்வாங்கு வாழ வழிகூறும் நூல்; மனித வாழ்வின் பயனாகிய வீடுபேறு அடைய வழிகூறும் நூல்; துன்பம் நிறைந்த உலகில் எவ்வாறு வாழவேண்டும் என்று கற்றுத்தரும் நூல்; இந்நாட்டினருக்கும் பிறநாடுகளில் வாழ்பவர்கட்கும் பயன்படும் நூல்.

**ஆன்மீகநூல் :**

திருவாசகமும் அதை இயற்றிய மாணிக்கவாசகரும், திருநீறு அணிந்து தில்லை நடராசப்பெருமானை வழிபடும் சைவநன்மக்கட்கே உரிமை என்று கருதுதல் தவறாகும். இந்த அறிவியல் உலகம் கண்டிருக்கும் ஒப்பு நோக்குக் கொள்கை முதல் அணுக்களின் சிற்றெல்லை வரை அந்நூலில் விளக்கப்படுகின்றது. மாணிக்கவாசகர் அணுவின் தந்தை என்று போற்றப்படும் ஜன்ஸ்டினுக்கு முன்னோடி ஆவார். அவர் ஆன்மீகத்துறையில் இருந்தவர், அறிவுத்துறை பற்றிய பயிற்சியில்லாதவர் என்று நினைப்பது தவறாகும். அவர் அறிவுத்துறையில் நெடுந்தூரம் முன்னேறிச் சென்று, மீண்டும் இந்த உலகத்தைத் திரும்பிப் பார்த்து, உலகியல் துன்பங்களைப் போக்க அறிவுத்துறை உதவாது, ஆன்மீகத் துறையே உதவும் என்று ஆராய்ந்து கண்டபின் திருவாசகம் பாடியவர்.

**திருவாதவூர் :**

மதுரைமாநகரை அடுத்துள்ள பழம்பதி திருவாதவூர். அவ்வூரில் ஆமாத்தியர் குலம் விளங்க அவதரித்தவர் திருவாதவூரர். இளமை யில் கல்வி என்னும் பல் கடல் கடந்தவர். இவரின் கல்விப் பெருக்

கத்தையும் மதிநுட்பத்தையும் அறிந்த மதுரைப்பாண்டியன், தன் கோநகருக்கு அழைத்துத் 'தென்னவன் பிரமராயன்' என்னும் பட்டம் அளித்துத் தலைமையமைச்சராக அமர்த்திக்கொள்கிருன். அவர் அமைச்சரானபின் பாண்டியநாடு, பல்வளம் கொழிக்கும் இன்ப நிலம் ஆகிறது. பாண்டியன் தன் குதிரைப்படையை விரிவுபடுத்த விரும்புகிருன். அவன் விருப்பத்தை நிறைவேற்றும் பொறுப்பு திருவாதவூரர்மேல் விழுகிறது கடல் கடந்த நாடுகளில் இருந்து புரவிகள் வாங்குவது அக்காலப் பழக்கம். "நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும் என்ற" பட்டினப்பாலைத் தொடரால் அந்த உண்மையை உணரலாம். பொன்னுடன் ஏவலகுடன் பாண்டியன் ஏவலின்படி, கடற்றுறை நோக்கிப் பயணமாகிருர்.

## திருப்பெருந்துறை நிகழ்ச்சி :

செல்லும் வழியில் திருப்பெருந்துறை என்னும் தெய்வத்தலத்தை அடைந்தவுடன், பழம்பிறப்பின் தொடர்பு காரணமாக ஒரு நிகழ்ச்சி நடைபெறுகிறது. இந்தநாட்டிலும் பிறநாடுகளிலும், ஒரு பிறப்பில் வாழ்வுநிலை எந்தநிலையில் முடிவு அடைகிறதோ அந்தநிலையிலிருந்து அடுத்த பிறவியின் வாழ்க்கை தொடர்கிறது என்ற நம்பிக்கையுண்டு. இதற்குச் சான்ருகக் கணிதமேதை இராமநுசம், செவிடனுகிய இசை மேதை பீத்கோவன், வயிலின்மேதை யாதிமெனுகின் போன்றவர் களின் இளம்பருவச் செயல்களைக் கூறலாம். இவர்கள் பெற்றிருந்த இணையற்ற திறமைக்குத் தர்க்கரீதியாக என்ன காரணம் கூறமுடியும்? விட்டகுறை தொட்டகுறைதானே!

## திண்ணன் உணர்ந்த மாற்றம் :

மானிடவாழ்வில் சில நிகழ்ச்சிகள் ஒருபுதிய திருப்பத்தை வகுத்துத்தருவது உண்டு. திண்ணன் தன் தோழனுடன் வேட்டைமேற் சென்ருன். எதிரிலே ஒருமலையைக்கண்டு, நாணனிடம் இதுயாது? என்ருன். அவன், அது 'காளத்திமலை'; அதில் "குடுமித்தேவர்" உள்ளார்; "கும்பிடலாம்" வா என்று அழைத்தான். மலையை நோக்கி இருவரும் சென்றனர். மலையை நெருங்க நெருங்க திண்ணன் தன்னுள் ஒருமாற்றம் நிகழ்வதை உணர்ந்தான். "ஆவது என்? இதனைக்கண்டு இங்கு அணைதொறும் என்மேல் பாரம்போவது ஒன்று உளது போலும்" என்ருன்.

## மூன்உணர்வு முளை அழுதல் :

திருஞானசம்பந்தப் பிள்ளையாரை, அவர் தந்தையார் சிவபாத இருதயர், சீர்காழிப் பிரமதீர்த்தக்கரையில் நிற்கவைத்து, நீரில் இறங்கி

மூழ்கினர். அப்பொழுது பிள்ளையார் அழுதார். அன்றுவரை அவர் வீட்டில் பலமுறை அழுதிருக்கலாம். ஆனால், அந்த அழுகைக்கும், பிரமதீர்த்தக்கரையில் அழுத அழுகைக்கும் நிறைந்த வேறுபாடு உண்டு. இதைச் சேக்கிழாரின், "முறைபுரிந்த முன் உணர்வு மூள அழத்தொடங்கினர்" என்னும் வாக்கால் அறியலாம்.

### பிறவித் தொடர்பு :

இவையெல்லாம் பழம்பிறப்புத் தொடர்பால், பண்டுவிட்டகுறை காரணமாக நிகழ்ந்தனவாகும். இதே போன்ற ஒருநிலைதான், திருவாதவூராருக்கும் திருப்பெருந்துறையில், அவ்வூரை நெருங்கும் போது ஏற்பட்டதாக அறிகின்றோம். அங்குக் குருந்தமர நிழலில் ஒரு துறவியை மாணவர் குழுவுடன் காண்கிறார். அவர் திருவடி களில் தன்னை ஒப்படைத்துவிடுகிறார். யாரோ ஒரு துறவியிடம் ஒரு நாட்டு முதலமைச்சர் இப்படி நடந்துகொள்ளலாமா? என்ற வினா எழலாம். திருவாதவூரர் அமைச்சராக இருந்தவர்; கூர்த்த மதி யுடையவர்; பலமனிதர்களை அறிவால் அளந்து மதிப்பிடும் ஆற்றல் உடையவர். அத்தகையவர், குருந்தமர நிழலில் இருந்த துறவியைச் சாதாரண மனிதராகக் காணவில்லை. தன்னை ஆண்டு அருள்புரியும் தெய்வமாக எண்ணினர்; அதனால், சரண்புகுந்தார்.

### மடை மாற்றம் :

ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்வது என்பது வேறு. ஒருவர் ஒருவரிடம் ஈடுபடுவது என்பதுவேறு. பாண்டி மண்டிலத்தின் தலைமையமைச்சர், குதிரை வாங்க ஏவலருடன், பொருளுடன் சென் றவர், தம் குறிக்கோளை மறந்து, குருந்தின் கீழிருந்த அருந்தவரிடம் ஈடுபட்டார். இந்த ஈடுபாடு, அவரையும் கடந்து ஏற்பட்டதாகும். இதன் ஆழத்தை என்னென்பது? ஞானாசிரியனைக் கண்டநிலையில் நிகழ்ந்த இந்நிகழ்ச்சி, அவர் வாழ்வில் ஏற்பட்ட மடைமாற்ற நிலையாகும். அந்த வினாடியிலிருந்து, அவர் மதுரைப் பாண்டியனின் அமைச்சர் அல்லர். அவர் ஓர் அருளாளர். யான், எனது என்னும் செருக்கு அறுத்த உத்தமர். இனிமேல் அவர் செய்யும் செயல்களுக்கு அவர்மட்டும் பொறுப்பு அல்லர்.

### முழுமாற்றம் :

திண்ணன் காளத்திமலையை அடைந்த உடனேயும் திருஞான சம்பந்தர் ஞானப்பால் உண்ட உடனேயும் சாதாரண மனிதநிலையில் இருந்து தெய்வீக நிலை அடைந்து விடுகின்றனர். இதற்குப் பின் திண்ணப்பர் கண்ணப்பர் ஆகிறார். இப்படித்தான், திருவாதவூரர்

திருப்பெருந்துறையில் ஞானாசிரியரைக் கண்டவுடன் ஒரு முழுமாற்றம் அடைந்து, மாணிக்கவாசகராக ஆகிறார்.

திண்ணப்பர் கண்ணப்பரானவுடன் தன் உற்றார் உறவினர்களை மறந்தார். அவர்களை அறியும் நிலையிலும் அவர் இல்லை. இதைத் "தன் பரிசும் வினையிரண்டும் சாரும்மலம் மூன்றும் அற அன்புப் பிழம்பாய்த் திரிவார்" என்னும் சேக்கிழார் வாக்கால் அறியலாம். திருஞானசம்பந்தர் சிவஞானசம்பந்தரானவுடன் தன் தந்தையைத் தந்தையே என்று அழைக்கவில்லை இறைவனையே தந்தை என்று அழைத்தார். "தாவில் சிவஞானசம்பந்தர் ஆயினர்" என்ற தொடரால் இதன் உண்மை உணரலாம்.

## ஒருசொல் :

நிறைந்த அனுபவங்காரணமாக முழுத்தன்மை பெற்று வாழ்ந்த பெரியோர்களின்வாழ்வினை ஆராய்ந்துபார்த்தால், அவர்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட திருப்பங்கள் ஏதோ ஒரு சொல்லால், நிகழ்ச்சியால் நிகழ்ந்திருப்பதை உணரமுடிகிறது. ஒருசாதாரண மனிதர் சதாசிவப் பிரமேந்திரர் ஆவதற்கு, அவர் அன்னையார் கூறிய ஒன்றிரண்டு சொற்கள்தாம் காரணம். மேற்குவங்கத்தில் கங்கை நதிக்கரையில் தோன்றிய நரேந்திரன் என்னும் சிறுவன், கல்விக்கடல் விவேகானந்தர் என்ற ஞானி ஆவதற்கு, அவர் குருநாதர் கூறிய ஒரு சொல்தான் காரணம். ஏன்? ஒருதொண்டர், திருநீலகண்ட நாயனார் ஆவதற்கு, அவர்மனைவி கூறிய 'திருநீலகண்டம்' என்னும் தொடரே காரணம். இப்படித்தான் கீழிருந்த அருந்தவர் கூறிய ஒருசொல்லால் திருவாதவூரர், மாணிக்கவாசகர் ஆனார்.

## இன்ப அனுபவம் :

குருந்தின் கீழிருந்த அருந்தவரிடம் தன்னையிழந்த திருவாதவூரர், இன்ப அனுபவம் என்னும் "ஆனந்த வெள்ளத்து இடை அழுந்திக்" கிடந்தார். குதிரை வாங்கக் கொண்டுவந்த பொருள், கோயில் எடுக்கச் செலவிடப்பெற்றது. தென்னவன் செய்தி அறிந்தான். உடன் வருமாறு ஓலை விடுத்தான். அதைக்கண்டவுடன் திருவாதவூரரின் இன்ப அனுபவம் கலைகிறது. என்னதான் பெரியவர்களாக இருந்தாலும் உலக அனுபவம் துன்பம் செய்யும்போது, சிறிது வருந்த நேரிடுவது இயல்பு. அடிகளும் வருந்தினர். தன் துன்பங்களை முறையிட எண்ணினர். யாரிடம் முறையிடமுடியும்? உடல், பொருள், ஆவி அனைத்தையும் யாரிடம் தந்தாரோ? அவரிடம் முறையிடமுற்பட்டார். இறைவன் அருள்புரிந்தான். "நினக்கு யாம் உண்டு! உளம் அஞ்சேல்! நிலைமை உடனே கைதவற்குக் கனத்த புரவிவரும் என்று" செய்தி அனுப்புவாய் என்று அருள்புரிந்தார்.

### அகமனம் உண்மை கூறும் :

திருவாதவூரர், கட்டளையை அப்படியே நிறைவேற்றினர். அப்படிச் செய்ததன்மூலம் தன் ஆண்டான் அடிமைத்திறம் எத் தன்மையது என்பதை உறுதிசெய்தார். உலகத்தார் இயலாது என்று கூறுகின்ற ஒன்றை- நடக்க முடியாதது என்று கூறப்படும் ஒன்றைத் தன் தலைவன் நடத்திக் கொடுப்பான் என்ற நம்பிக்கையில் அவ்வாறு செய்தார். அவர் அகமனம் அவ்வாறு கூறியது. அதனால் செய்தார். நம்பிக்கைக்கு உரியவர்கள் கூறினால், நாம்கூட அவ்வாறு செய்வது உண்டல்லவா?

### தண்டனைமூலம் கழுவாய் :

திருவாதவூரர் குதிரைகள் வந்துசேரும் என்று கூறிய நாளில், அவைகள் வந்துசேரவில்லை. மதுரைப்பாண்டியன் அவரைத் தண்டித்தான். அவன் செயல் நியாயம் ஆனதேயாகும். தான் தேடி அமைச்சராக வைத்தவர் என்பதற்காக விட்டுவிடவில்லை. பொதுப் பணத்தைச் செலவிட்டது குற்றம். அதனால், தண்டித்தான். அவன் தண்டித்தது அரசநீதி. செய்த குற்றத்திற்குத் தண்டனை பெற்றுத் திருவாதவூரரும் கழுவாய் தேடிக்கொண்டார்.

### இயற்கையின் சட்டம் :

உலகில் தோன்றும் பெரியோர்கள், தாங்கள் பிறந்ததன் பயனை உலகிற்கு வழங்க வேண்டுமானல், அவர்களும் இந்த உலகில் ஓரளவு துன்பம் அடைந்துதான் தீரவேண்டும். அயோத்தி இராமன் காடு சென்று துன்பம் அடைந்ததால்தான் இராவணவதம் நிகழ்ந்தது. கைகேயியின் கருணையற்ற மனம்தான், பின்னர் பல நன்மைகள் நிகழ ஏதுவாயிற்று. திருநாவுக்கரசர் நீற்றறையில் இட்டுத் துன்பப்படுத்தப் பட்டதால்தான் தேவாரப்பாடல்கள் கிடைத்தன. இயேசு சிலுவை யில் அறையப்பட்டதால்தான், ஒரு சமயம் உருவாக முடிந்தது. நாம் கருப்பஞ்சாறு அருந்த வேண்டுமானல், கரும்பு ஆலையில் நசுக்கப்பட்டாகவேண்டும். இது நியதி. இயற்கையின் சட்டம். இந்த வகையில்தான் திருவாதவூரர் தண்டிக்கப்பட்டதும் நியாயம் ஆகும். அதனால்தான் நமக்குத் திருவாசகம் கிடைத்தது.

### பரிமாச் சேவகன் !

திருவாதவூரர் துன்புறுத்தப்பட்டார். மறுநாள் ஆலவாய் அண்ணல் பரிமாச்சேவகனுகப் பல புரவிகளுடன் வந்தான். புரவி களைப் பாண்டியனிடம் அளித்து, அதற்கு அடையாளமாகக் "கயிறு

மாறினன். "அரசே! இந்தவினாடியிலிருந்து குதிரைகளின் சொந்தக் காரன் நீயேஆவாய் அதன் நன்மை தீமைஅனைத்தும் உன் பொறுப்பு. • இப்புரவிகள், காலம்வந்தால் மதிலைத் தாண்டும், சாக்கடையில் புகுந்து செல்லும்; திறந்தவெளியில் அலையும்' என்று இலக்கணம் புகன்றான். மறுநாள் ஒரு கொள்ளைநோய் வந்து குதிரைகள் இறந்தால் அவன்தான் பொறுப்பு இங்கு. இறப்பதற்குப் பதிலாக நரிகளாக மாறி ஓடின.

## தண்டனை ஏன்?

பாண்டியன் இரண்டாம்முறை தண்டிக்கத் தொடங்கினான். முதல்முறை குதிரைகள் வராதபோது தண்டித்தது அரசநீதி. குதிரைகளைப் பெற்றுக்கொண்டபின், தண்டிக்கும் உரிமை உடையவன் அல்லன். தம்பிரான் தோழரேயாயினும் சுந்தரர், சங்கிலியாரிடம் தந்த வாக்குறுதியைமீறித் திருவொற்றியூர் எல்லை தாண்டிய போது, கண் ஒளி இழந்தார். அதுபோல், பொதுப்பணம் செலவிட்ட குற்றத்திற்குத் தண்டனை பெற்றுவிட்டார் திருவாதவூரர். ஆனால், இரண்டாம்முறை தண்டனைதர முற்பட்டது தவறு. அதனால்தான் இறைவன் வைகையைப் பெருகவிட்டான்; பிட்டிற்கு மண்சுமந்தான், பிரம்படி பட்டான். ஒருதட்டுமண் உடைப்பை அடைத்தது. பாண்டியன் பிழை உணர்ந்து மன்னிப்பு வேண்டினான். திருவாதவூரர் திருவாசகம் பாடி, தில்லை நடராசப் பெருமானின் திருவடியிற் கலந்தார்.

## மானுடத்தின் இயல்பு:

பிழை செய்வது மனிதஇயல்பு. அப்பிழைக்கு இரங்கி அழுவதன் மூலம் கழுவாய் தேடிக்கொள்ளமுடியும் என்று மாணிக்கவாசகர் நம்பினார். தான் செய்த குற்றங்களை முறையிட்டு வருந்தினார். நம்மைப்போலத் தவறு செய்வதையே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டவர் அல்லர் அவர். என்றோ ஒருநாள் செய்த தவற்றிற்காக, அதை நினைத்துநினைத்து வருந்தியவர். 'குதிரைகள் வரும்' என்று தான் ஓலை அனுப்பியது தவறு என்று அவர் கருதினார். அதனால் நாற்பதுக்கு மேற்பட்ட இடங்களில் தன்னைப் பொய்யன் என்று கூறி வருந்துகிறார். "யானே பொய்! என் நெஞ்சும் பொய்! என் அன்பும் பொய்!" என்று பாடுவார்.

## நம்விடுதலைக்குத் திருவாசகம்:

மதுரைவீதியில் கோவலன் வெட்டுண்டு கிடக்கிறான். கண்ணகி அங்கு வந்துசேர்கிறாள். துண்டாடியஉடல் ஒன்றுகூடி, கண்ணகியை நோக்கி, "எழுதெழில் மலர் உண்கண் இருந்தைக்க" என்று கூறியதாகச் சிலம்பு கூறும். கோவலன் கண்ணகியை 'இருக்க' என்று

பணித்ததால்தான் 'வழக்குரை' நிகழ்ச்சி நடந்தது. உண்மை உணர்த்தப்பட்டது. அதுபோல, இறைவன், மாணிக்கவாசகருக்குத் தந்த இன்ப அனுபவத்தை மீண்டும் வாங்கிக்கொண்டு 'இங்கு இருக்க' என்று கூறிவிடுகிறார். அதனால் மாணிக்கவாசகருக்குத் துன்பம்; நமக்கு நன்மை. மற்ற அடியார்களுடன் மாணிக்கவாசகரும் போயிருந்தால், தனி ஒரு உயிர் நன்மை அடைந்திருக்கும். திருவாசகம் கிடைத்திருக்காது. நம்போன்றோர் விடுதலை அடையக் கருதித்தான் அடிகளை 'இருக்க' என்று பணித்தான் போலும்!

### திருவாசக உண்மை :

உயிர் விடுதலைபெற வேண்டுமா? ஐம்பொறிகளை அதன்வழி போகவிடாது அடக்கவேண்டும் என்கிறது சமணர்களின் தம்மபதம். பெற்றுள்ள அறிவால் ஆழ்ந்த தியானம் செய் என்கிறது பௌத்தர்களின் திரிபிடகம். இதற்கு மாணிக்கவாசகர் ஒரு வழி கூறுகின்றார். பிறவியைத் தவிர்த்து உயிர் மீட்சி வேண்டுமா? அதற்குப் பிறவி இல்லாத இறைவனை வழிபடு! 'அனைத்து எலும்பு உள்நெகப்' பாடு! கருணைக்கடலாகிய இறைவன் அருள்வான் என்பதே திருவாசகம் உணர்த்தும் உண்மை.

---

<u>இயற்கை மருத்துவம்</u>

# எலுமிச்சம் பழம்

திரு. கெ. கி. சத்தியநாராயணன், கோயம்புத்தூர்.

இயற்கை மருத்துவத்தில் முக்கிய இடம் பெறுவன பழங்களே. பழ வகைகளில் 'மருத்துவ மன்னன்' எனச் சிறப்பிக்கப்படும் எலுமிச்சம் பழத்தின் பயன்களில் சில:—

1. குளிக்குப் நீரில் இரு எலுமிச்சம்பழ ரசத்தையும் சிறிது உப்பையும் கலந்து நாள்தோறும் குளித்தால் அழுக்கு, கெட்டநாற்றம் முதலியன மறைந்து தோல் மென்மையாகும்.
2. பழத்தை அறுத்து முகத்தில் தேய்த்துக்குளிக்க அம்மைத் தழும்புகள் முகப்பருக்கள் ஆகியன மறையும்.
3. பழரசத்தைத் தண்ணீரில் கலந்து குடித்துவர, தொண்டை எரிச்சல் கரகரப்பு முதலியன குணமாகும்.
4. அஜீரணம் நீங்குவதற்கு, உணவு உண்பதற்கு ஒருமணி நேரம் முன்னதாக வெந்நீரில் பழரசத்தைப் பிழிந்து அருந்தினால் அஜீரணம் நீங்கும்.
5. இரவு படுக்குமுன் தினமும் 3 துளி பழரசத்தைக் கண்ணில்விட மங்கல் நீங்கி பார்வை நன்றாகத்தெரியும்.

## தருமையாதீனக் குருமணிகள்

# திருநாமப் பாடல்

திருமுறைக்கலாநிதி

### திரு. க. சொக்கலிங்க ஓதுவார், வேளூர்

இராகம் — கல்யாணி ] [ தாளம் — ஆதி

**பல்லவி**

திருநாமம் சொல்லிப் பரவிடுவோம்
சிவஞான மேபெறச் சிந்தை மகிழ்ந்துதினம் (திரு)

**அனுபல்லவி**

வரும் ஆரூர் வள்ளல் ஞானப் பிரகாசர்
வளர்தருமை முதல்வர் குருஞான சம்பந்தர் (திரு)

**சரணம்**

1. ஆனந்த பரவசர் சச்சிதா னந்தர்
அருள்மா சிலாமணியர் ஞானசம் பந்தர்
ஊனந் தவிர்க்குந்திரு ஞானசம்பந்தர்
ஓங்குதிரு அம்பல தேசிகர் என்றேஉயர் (திரு)

2. அழகிய திருச்சிற்றம் பலவர் திருநாவுக்
கரசர் அருள்மேவும் சிவஞான தேசிகர்
மழவிடை யான்வழி வருசச்சி தானந்தர்
வையம்புகழ் முத்துக் குமரதேசிகர் என்றே (திரு)

3. ஞானசம் பந்தர் கந்தப்ப குருநாளும்
நாமுய்ய வேவரும் மாசிலா மணியர்
நானிலம் புகழ்சச்சி தானந்த தேசிகர்
ஞானமய மாகிய மாணிக்க வாசகர் (திரு)

4. சிவஞான தேசிகர் மாணிக்க வாசகர்
சீர்வளர் சிவஞான தேசிகர் மேலாம்
தவமுதல்வர் சச்சி தானந்த தேசிகர்
தண்ணருள் தந்திடும் மாணிக்க வாசகர். (திரு)

5. சுப்பிர மணிய தேசிகர் ஞானச்
சோதியாய் விளங்கும் சண்முக தேசிகர்
செப்பும் கயிலைசுப் பிரமணிய குருஇன்று
சிவத்திரு வுருவாய்த் திகழ்சண் முககுரு. (திரு)

# எந்தப்பிறவி வேண்டும்?

சிவமணி புலவர். திரு. ம. சிவசம்பு பி லிட்.

பிறவி துன்பமானது; பிறவி வேண்டாம். 'பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்பு உண்டேல் உம்மை மறவாமை வேண்டும்' என்கிறார். காரைக்கால் அம்மையார். "வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை" என்கிறார் திருவள்ளுவர். பிறவாமை வேண்டும் என்று கேட்கின்ற அடியவர் கூட்டத்தின் நடுவில், 'மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்று புரட்சிக்குரலை எழுப்புகிறார் நாவுக்கரசர். அம்மனிதப்பிறவியிலும் கேவலமான நாய்ப்பிறவி வேண்டும் என்று கேட்கிறார் ஒரு அடியவர். நாய்ப்பிறவி வேண்டும் என்று கேட்பதை நம்மால் புரிந்துகொள்ள முடியவில்லை. காரணம் நாம் அவ்வளவு இழிநிலையில் இருக்கின்றோம்.

பிறவியில் இழிந்தது நாய்ப்பிறவி என நினைக்கிறோம். ஆனால் அடியவர்கள் தம்மை நாயிற் கடையராகவே கருதுகின்றனர். 'நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்கு;' 'நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனை;' 'ஆதமிலி நாயேனை;' 'கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனை' என்கிறார் மாணிக்கவாசகர். 'நாயேன் பல நாளும் நினைப்பின்றி மனத்துன்னைப் பேயாய்த் திரிந்து எய்த்தேன்' என்கிறார் சுந்தரர். இவ்வாறு கூறும் அடியவர் வாக்குகளைக் கவனித்தால் அவர்கள் தம்மை நாயாகவும் நாயினும் கடையராகவும் எண்ணிய எண்ணம் நமக்கு நன்கு விளங்கும். அந்த எண்ணமே அவர்களை அடியவராக்கி நம்மைஎல்லாம் தொழச்செய்தது. அவர்களை நாமும் நாயனார் என வணங்குகின்றோம்.

அருணபுரி அன்பர் ஒருவர், "நாய்ப்பிறவி எனக்கு வேண்டும். நான் விரும்புவது கடைவீதி சுற்றும் தெருநாய்ப்பிறவி அன்று; தினந்தோறும் சிவபூசை செய்து உணவு அருந்தும் அடியவர்கள் உண்ட எச்சி இலையில் உள்ள சேடத்தை உண்ணும் நாயாய்ப் பிறக்கவேண்டும்" என்கிறார்.

"ஐயரப் பெரும்புல்லர்க் கேஇதஞ் சொல்லி யிரந்துழல்வேன்
மாயாப் பிறவியறுக்கும் சிவபெருமான்பதம் என்றும்
ஓயாமல் பூசைசெய்துஉண்ணன்பர் சேடத்தை உண்ணும்ஒரு
நாயாய்ப் பிறந்திலனே அருணபுரி நாட்டினிலே"

சிவபூசை செய்துண்ணும் அடியவர்கள் உண்ட எச்சிஇலையில் உள்ள சேடத்தை உண்ணுதல் அவ்வளவு புண்ணியம் என்று கருது கிருர். இவருக்குமுன்பே ஒரு அடியவர் குருவிடம் வழிபட்டு இவ்வாறு வரம் கேட்டிருக்கிருர். 'குருமணியே! அடியேன் வேண்டுவது பிறவாமையே; அது தந்தருள்வது அரிதாயின் என் விருப்பத்திற்கு உரிய ஒரு பிறவி தந்தருள். இந்திரனுகவோ, பிரமனுகவோ, விஷ்ணுவாகவோ பிறக்க விரும்புகிலேன். ஐந்து தேவதருவின்கீழ் இருந்தாலும் பல்லுயிர்த் தொகுதியைப் படைத்தலும், உலகங்காத்தலும் பிறவியைத் தருவன. கல்வியும் ஒழுக்கமும் இல்லாமல் பழியுடையராஞலும் உன் அடியார் என்ருல் போதும். அவர் உண்டு தெருவிற் போட்ட எச்சிலை உண்டு பிறவிக்கடலில் வருந்தும் வரம்பெற்றநாயாகப் பிறக்கச்செய்தருள்' என்று வேண்டுகின்ருர்.

தருமையம் பதிவாழ் சற்குருராய! ......
ஈண்டுனைத் தமியேன் வேண்டுவது யாதெனின் ......
பிறவா நன்னெறி பெறப்புரி வதுவே
அங்கது புரிதற்கு அரிதெனின் இங்கொரு
சனனம்யான் வேண்டுவது இனிதருள் எனக்கே
பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர்
திருவமு தார்ந்து தெருக்கடை யெறிந்த
பரிகலம் மாந்தியிப் பவக்கடல் உழக்கும்
வரனுடை ஞமலி யாகிநின்
அருளையும் அயரா தவதரிப் பதுவே. -பண்டாரமும்மணிக்கோவை

(ஞமலி - நாய். பரிகலம் - பரிகலச்சேடம் குரு உண்டு எஞ்சிய சேடம். இது சன்மப்பிணிபோக்கும்.)

இப்படித் துணிந்து வரம் கேட்டவர் யார்? பிறவியின் இழிவும் பிறவாமையின் உயர்வும், சிவபக்தியும் அடியார்பக்தியும் மானிடப் பிறப்பின் கீழ்மையும் ஏனைப்பிறப்பில் நாய்ப்பிறப்பின் மேன்மையும் நன்குணர்ந்த நம் தவச்செல்வர் குமரகுருபர அடிகளே ஆவர். அவர் பொன்னடிபோற்றி வணங்குவோம். குருவின் அருள்பெறுவோம்.

---

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணிமன்றம்

### திருத்துறையூர் - கிளை

திருத்துறையூரில் அன்பர்களால் நிறுவப்பட்டுள்ள இப்பணி மன்றக் கிளையின் சார்பில் கார்த்திகைப் பூர நாள் 30—11—80 அன்று சிறப்பாக ஸ்ரீ அருணந்திசிவாசாரிய சுவாமிகளுக்கு அபிஷேக ஆராதனைகளும் சொற்பொழிவும் நிகழ்ந்தன திருவதிகை வித்துவான் திரு ந சண்முகசுந்தர தேசிகர் சிவஞானபோத முதற்சூத்திரத்தை விளக்கிப்பேசினுர்.

# மஞ்சள் (TURMERIC)

திரு, நா. தனுக்கோடி,

மருத்துவ அலுவலர், திருநெய்ப்பேர்

மஞ்சள் எல்லோரும் நன்கறிந்த செடியின் கிழங்கு. இதன் உபயோகம் வெகு விரிவானது. உணவாகவும், மருந்தாகவும், மங்களகரமான பதார்த்தமாகவும், தேவதா பூஜைக்காகவும், மந்திரப் பிரயோகங்களுக்குரிய சாதன திரவியமாகவும் இன்னும் பல்வேறு விதமாகவும் உபயோகப்படுகிறது.

மஞ்சள்கிழங்கின் சுவை கைப்பும், கார்ப்புமாகும். உணவில் சேர்த்து உபயோகித்தால் அக்கினிதீபனம் செய்கின்றது குடலில் ஏற்படும் வாயுவையும், கபத்தையும் கண்டிக்கிறது. சில உணவினுல் குடலில் ஏற்படக்கூடிய புளித்தல், அழுகல் முதலிய கெடுதல்களைத் தடுக்கின்றது. அருசியைப் போக்குகின்றது.

சுமங்கலி ஸ்திரீகளுக்கும், கன்னிகைகளுக்கும் மஞ்சளையரைத்து முகம், உடல் பூராவும் பூசிக்குளிப்பது வியர்வை நாற்றம், சொறி சிரங்குகள், புலால் நாற்றம் விலகும். சாந்தியும், லாவண்யமும் ஏற்படும். புருஷ வசீகரணமும் விசேஷமாய் ஏற்படும். முகம், கை, கால்களில் ரோமங்கள் முளைப்பதைத் தவிர்க்கின்றது. சோப்பு தேய்த்துக் கொள்ளாமல் மஞ்சள் சேர்ந்த வாசனைப் பொடியை ஒரு மாதம் உபயோகித்தால் சருமம் அதிக அழகாக வசீகரம் ஏற்படுவது தானுக விளங்கும். மஞ்சளுக்கு "முகமினுக்கி" என்ற பெயர் அகத்திய முனிவரால் கொடுக்கப்பட்டதாகும்.

உஷ்ண சப்பந்தத்தினுல் தேகத்திற்கு உண்டாகக்கூடிய கேட்டை நீக்குவதில் மஞ்சள் ஒப்புயர்வற்றதாகும். இரத்தத்தைச் சுத்திகரிக்கின்றது. இறுகிப் போன இரத்தத்தைக் கரைக்கின்றது. பலமான அடிகளுக்கும் மஞ்சள்பற்று உடனே குணம் கொடுக்கிறது. நெடுநாள் ஆயுர்வேதமுறைப்படி ஔஷதம் உண்டவர்கள் மஞ்சளிட்டுக் காய்ச்சிய எண்ணெயை ஸ்நானம் செய்வார்கள்.

கண் வலியால் வேதனைப்படுபவர்கள் மஞ்சளை அரைத்து மெல்லிய துணியில் தடவி, காயவைத்து அத்துணியை ஒற்றி வந்தால் கண் நோய் மட்டுப்படுகின்றது. மஞ்சள் சூரணத்தில் கொதிக்கும் நீர்விட்டு ஆற்றியபின்பு நீரை அளவுடன் சாப்பிட்டு வந்தால்

வயிற்றுவலி, பொறுமல் நீங்கும், குடலுக்குப்பலம் ஏற்படும். காமாலை நோய், முறைக்காய்ச்சல், கபநோய்கள் குணமாகும். மதுமேஹத் திலும் (Diabetes) லஸீகா மேஹத்திலும் (Alluminaria) முக்கியமாய் உபயோகிக்கப்படுகின்றது மூத்திர சம்பந்தமான ரோகங்களிலும் மஞ்சள் விசேஷப் பிரயோஜனமுள்ளது.

மஞ்சள்புகையை மூக்கினுல் உறிஞ்சினுல் ஜலதோஷம் தலை வலி மூக்கடைப்பு இவற்றை நீக்குகிறது சுவாச காசத்தை ஓரளவு குறைக்கின்றது. மஞ்சள் சூரணத்தை கிளிசரின் (Glycerin) என்னும் மருந்தில் ஊற வைத்து (காற்றுப்புகாவண்ணம் பாட்டிலை இறுக மூடிவைக்கவும்) காது, தொண்டைப் புண்களுக்குத் தடவ நல்லகுனம் தரும்.

மஞ்சள் நிறமுடைய உணவுப் பொருள்களிலும் எண்ணெயிலும் வைட்டமின் உள்ளதாக மேல்நாட்டு மருத்துவ முறை கூறுகின்றது. மஞ்சள் நிற வெளிச்சத்திற்கு விளக்குகளை மொய்க்கும் விட்டில் ஜீவராசிகள் வராது என்று நம்பப் படுகிறது.

தங்கத்தின் நிறமுடையதும், இகபர ஐஸ்வரியங்களைத் தரும் தேவதையாகிய இலஷ்மி தேவியின் அம்சமானதும் சரீர சுகத்தை மிகுதிப் படுத்துவதும், மங்களகரமான பொருள்களில் முதன்மை பெற்றதும், பூர்வீககாலந் தொடங்கி இதுவரை எவ்வித இடையூறு மில்லாது அனுஷ்டானத்திலிருப்பதுமான மஞ்சளை உபயோகித்து உணவிலும் உண்டு வந்து தேஜஸையும் லஷ்மி கடாட்சத்தையும் அடைவோமாக

---

## திருப்பள்ளியெழுச்சி

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையும் ஆண்டுகொண்டு இன்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே.

— மாணிக்கவாசகர்.

# செய்திகள்

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு கார்த்திகைத் திங்கள் 13 ஆம் நாள் (28—11—1980) வெள்ளிக்கிழமை காலை திருவாஞ்சியம் அருள்மிகு வாஞ்சியநாதேசுவரர் ஆலயத்திலும் மாலை திருநன்னிலத்துப்பெருங்கோயில் அருள்மிகு மதுவனேசுவரர் ஆலயத்திலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது. அவ்வத்தலங்களில் திருப்பதிகப் பாராயணம் நடைபெற்றது. சிறப்பு வழிபாட்டை ஒட்டிக் காலை திருவாஞ்சியம் அருள்மிகு வாஞ்சியநாதர் ஆலயத்திலும், மாலை திருநன்னிலத்துப்பெருங்கோயிலிலும் சொற்பொழிவுகள் நடைபெற்றன. காலை நிகழ்ச்சியில் திருவாஞ்சிய ஆலய நிர்வாக அதிகாரி வரவேற்புரை வழங்க, தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், வித்துவான் திரு, மு. சிவச்சந்திரன் எம். ஏ., அவர்கள் வழிபாட்டின் பயன்' என்ற தலைப்பில் உரையாற்றினர். மாலை நிகழ்ச்சியில் திருநன்னிலத்துப் பெருங்கோயில் நிர்வாக அதிகாரி வரவேற்புரை வழங்க, தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர், வித்துவான் திரு. சோ. முத்தையன் எம்.ஏ. அவர்கள் 'சமய வாழ்வு' என்ற தலைப்பில் உரையாற்றினர். தருமையாதீன அடியவர் ஸ்ரீ நெல்லையப்ப சுவாமி சமயச்சிந்தனை வழங்கினர். அச்சிடப்பெற்ற தலத்திருப்பதிகநூல் வந்திருந்த அன்பர்கட்கு வழங்கப்பட்டது.

## கந்த சஷ்டி விழா

**தருமையாதீனத்தில் :**

அருள்மிகு முருகப்பெருமானுக்குரிய திருநாள்களுள் மிகச் சிறந்ததாகக் கொண்டாடப்படும் கந்தசஷ்டி விழா 8—11—1980 சனிக்கிழமை முதல் 14—11—1980 வெள்ளிக்கிழமை வரை மிகச் சிறந்த முறையில் நிகழ்வுற்றது. ஆதீனத்தில், ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான்வழிபாட்டுடன் ஸ்ரீ முருகப்பெருமானுக்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சிறப்பு வழிபாடு நிகழ்த்தி

யருளினுர்கள். தருமையாதீனத் தமிழ்ப்புலவர், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர், வித்துவான் திரு கு. சுந்தரமூர்த்தி எம். ஏ. அவர்களால் கந்தபுராண விரிவுரை ஸ்ரீ சொக்கநாதப் பெருமான் பூஜைமடத்தில் நிகழ்த்தப்பெற்றது. ஆதீன அடியவர் களும், அன்பர்களும், அலுவலர்களும் கேட்டுப் பயனுற்றனர்.

**ஆதீன தேவஸ்தானங்களில்**

தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி, திருப்பனந்தாள், திருவையாறு. திருபுவனம், திருக்கடவூர், வைத்தீசுவரன்கோயில் முதலிய திருக்கோயில்களில் ஸ்ரீ முருகப்பெருமானுக்குச் சிறப்பு வழிபாடுகளுடன் 8—11—80 முதல் 14—11—80 முடிய தக்க அறிஞர்களைக்கொண்டு கந்தபுராணச் சொற்பொழிவுகளும் நிகழ்த்து விக்கப்பெற்றன.

சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமிதிருக்கோயிலில் திருஞானசம்பந்தர் திருக்கோயில் சந்நிதியில் பூம்புகார் கல்லூரிப் பேராசிரியர் திரு. த. அகரமுதல்வன் எம். ஏ அவர்களும், திருக்கடவூர் ஸ்ரீ அமிர்த கடேசுவரர் தேவஸ்தானத்தில் தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிப் பேராசிரியர் வித்துவான் திரு சொ. முத்தையன் எம் ஏ. அவர்களும், வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி திருக்கோயிலில் சென்னை, ஆங்கீரச ஸ்ரீ எஸ். வேங்கடேசசர்மா அவர்களும், திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவர சுவாமி ஆலயத்தில் மாயூரம் தேசிய மேனிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் திரு. ஆ இராமபத்திரன் எம்.ஏ. அவர்களும் கந்தபுராண விரிவுரையாற்றினர் அவ்வத்தலத்து அன்பர் பலர் பெருமானைத் தரிசித்தும், பெருமான் புகழ் கேட்டும் இன்புற்றனர்.

வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமிக்கும், மாயூரம் குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கும் சஷ்டிவிழா ஆறு நாட்களிலும் விசேஷ அபிஷேக ஆரா தனைகளும் திருவீதியுலாக் காட்சியும் நடைபெற்றன. குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்கு லட்சார்ச்சனை செய்விக்கப்பெற்றது.

## கடைமுழுக்கு விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான மாயூரம் வள்ளலார் கோயில் ஸ்ரீ வதான்யேசுவரசுவாமி திருக்கோயிலில் கடைமுழுக்கை இறுதியாகக்கொண்டு பத்துநாட்கள் துலா உற்சவம் நடைபெற்றது. நாடோறும் பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாக் காட்சியும் 15—11—80 கடைமுழுக்கன்று தீர்த்தம் கொடுத்தருளலும் நிகழ்ந்தன. அன்பர்கள் தீர்த்தமாடித் திருவருள் பெற்றனர். 12—11—80 திருக்கல்யாணத் திருநாளன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழி பாடுநிகழ்த்தி அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளினர்கள்.

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
## ஸ்ரீ ஞானனந்தர் வழிபாட்டுச் சங்க விழாவிற்கு விஜயம்

மாயூரம் காவேரிநகர் ஸ்ரீ ஞானனந்தர் வழிபாட்டுச் சங்கத்தில் ஓராண்டுகாலமாக நிகழ்ந்துவந்த திருவாசகத் தொடர்விரிவுரை நிறைவுவிழா 3—12—80 மாலை நடைபெற்றது. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் மாலை 7 மணி அளவில் அங்குத் திருக்கோயில்கொண்டு விளங்கும் ஸ்ரீ கற்பகவிநாயகரை வழிபட்டு விழா அரங்கத்திற்கு எழுந்தருளினார்கள். அன்பர்கள் குருமகாசந்நிதானம் அவர்களை வரவேற்று, கொலுவில் எழுந்தருளச்செய்து வழிபட்டுத் திருநீற்றுப்பிரசாதம் பெற்றார்கள். பூம்புகார் – கிளை ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணி மன்றத்தின் தலைவர் திரு ஆர். இராஜசேகரன் பி. எஸ்ஸி., பி. எல். அவர்கள் தலைமையில் வித்துவான் திரு. இரா. செல்வக்கணபதி எம்.ஏ. அவர்கள் திருவாசகமும் பிற திருமுறைகளும் என்பதுபற்றியும் வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ. அவர்கள் திருவாசக விரிவுரையின் நிறைவு உரையாக அச்சோப்பதிகம் பற்றியும் சொற்பொழிவாற்றினார்கள். வித்துவான் திரு. தா ம. வெள்ளைவாரணம் அவர்கள் திருவாசகத் தேன் துளிகள் நூல் வெளியிட்டு விளக்கம்பற்றி உரைநிகழ்த்தினார்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் தொடர்விரிவுரை நிகழ்த்திய தருமையாதீனக் கல்லூரி முதல்வர் திரு. வி சா. குருசாமி தேசிகர் எம். ஏ. அவர்களுக்கு ஸ்ரீ ஞானனந்தர் வழிபாட்டுச்சங்கச்சார்பில் 'திருவாசக உரைமணி' என்ற பட்டத்தையும், சமயப்பணிகளைச் சிறப்பாகச் செய்துவரும் திரு. கு பாலகிருஷ்ண உடையார் அவர்களுக்கு ஆதீனச்சார்பில் 'அருட்பணிச் செல்வர்' என்ற பட்டத்தையும் வழங்கிப் பட்டாடையும் பொன்னடையும் போர்த்தி ஆசியுரை அருளினார்கள்.

இவ்விழா நிகழ்ந்த மூன்று நாட்களில் முதல்நாள் 1—12–80 திங்களன்று திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீமத் காசிவாசி முத்துக்குமாரசாமித்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் எழுந்தருளித்திருமுறைக் கோயிலைத் திறந்துவைத்து வாழ்த்துரை வழங்கினார்கள். அன்று மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் தலைமையிலும், 2—12—80 செவ்வாயன்று மாயூரம் – கிளை ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணி மன்றத் தலைவர் திரு V. ஆறுமுகம்பிள்ளை I.A.S. (ஓய்வு) அவர்கள் தலைமையிலும் டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பிஎச். டி., வித்துவான் திரு. ஆ. இராமபத்திரன் எம். ஏ. வித்துவான் திரு S. சடாட்சரம் ஆகியோர் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். தருமையாதீன தேவஸ்தானத் திருமுறைப் பணியாளர்கள் திரு. S. தண்டபாணி, திரு S திருஞானசம்பந்தம் ஆகியோர் விழாநாட்களில் திருமுறைப் பாராயணம் நிகழ்த்தினர்.




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

**ரௌத்திரி ஹு மார்கழி மீ 1உ முதல் 29உ முடிய.**

**( 16—12—80 முதல் 13—1—81 முடிய )**

ஸ்ரீ ரௌத்திரி ஹு கார்த்திகை மீ 30உ சோமவாரம் உத்திரட்டாதி நக்ஷத்திரம் பாலவகரணம் கூடிய உதயம் முதல் 31 நாழிகை 7 விநாடிக்கு மிதுன லக்னத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரியபகவான் விருச்சிக ராசியிலிருந்து தனுர்ராசி சங்கிரமணமாக மார்கழிமாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். அன்று ஷடசீதி புண்ணியகாலமாகும். மறுதினம் மார்கழி மீ 1உ மங்களவாரம் தனுர்மாத பூஜாரம்பம். எல்லா தேவஸ்தானங்களிலும் அருணோதயத்தில் இறைவன் திருப்பள்ளி எழுந்து லோகத்திற்கெல்லாம் அருள்பாலிப்பார். பக்த கோடிகள் அனைவரும் ஆலயம் சென்று உஷக்கால தெய்வதரிசனம் செய்து ஆனந்த திருமுகத்துடன் மிளிர்வார்கள். சங்கிரமகால கிரக ஸ்திதியினால் உலகில் எங்கும் விளைபொருள்கள் விளைந்து பெருகி வரும். உலகமெங்கும் மக்கள் உணவு, உடை, உறைவிட வசதிகளுடன் உய்வார்கள். கிரியை ஸ்தானத்தில் உள்ள சந்திரனாலும் கிரியைஸ்தானாதிபதி நின்ற நிலையினாலும் நாடுகளில் எங்கும் சுபிட்சம் நிலவும். பிரஜைகள் செய்தொழிலில் முன்னேற்றமடைந்து உயர்வார்கள். தேசங்களில் எங்கும் ஆன்றோர்களால் சிவதர்மங்கள் நடைபெற்றுக்கொண்டிருக்கும். தேசங்களில் ஆளுநர்கள் தெய்வ நீதியாக ஆட்சி நடத்தி மக்கள் நலம் காப்பர்.

உலகிலுள்ள திருமடங்கள் ஆசாரியபீடங்களில் தெய்வத் திருத்தோற்றமாக விளங்குகின்ற சிவஞான குருமகான்கள் உலகமெங்கும் சிவசமயம் பரவ நல்ல காரியங்களை நிகழ்த்திச் சிறப்பிப்பார்கள். அன்னார் வழியில் சிவாசாரியர்கள் சைவசீலர்கள் குழுமிய திருச்சபைகள் பல ஏற்படும். லோகமெங்கும் சிவசமயம் பரவும், தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள், விசேஷ உஷக்கால பூசைகள், உற்சவங்கள் சிறப்பாக நடைபெறும். உலக மாந்தர்கள் தேவாலயம் சென்று தெய்வதரிசனம் செய்து மனத்தெளிவுடன் சீரிய வாழ்க்கை நடத்திப் புகழுடன் விளங்குவார்கள்.

குறிப்பு :— இந்தத்தேவர்களின் பிராதக்காலமாகிய மார்கழியில் ‘ அகஸ் ’ என்கிற பகல் நாழிகை அளவு குறைவானதால் அனைவரும் விடியற்காலம் 4½ மணிக்கு முன்னதாகத் துயில் எழுந்து காலைக்கடன் முடித்து, குளிர்ந்தநீரில் ஸ்நானம் செய்தல்வேண்டும் ஆலயம் சென்று உஷக்காலத்தில் இறைவனைத் தரிசனம் செய்தல்வேண்டும். பின்னர் நித்திய பணிகளைக் காலத்தில் தொடங்கிவிடவேண்டும். அந்நியதியால் இறைவனருளால் சகல பாக்கியங்களும் உண்டாகும். இல்லற வாழ்க்கையில் சுபிட்சம் ஏற்படும். யோகபலன் தராத கிரக நிலையை உடையோராயினும் செம்மை உண்டாகும். ஈஸ்வர கிருபையில் முயற்சிக்கின்ற நற்பணிகளின் வழியில் ஐஸ்வரியம் வந்துசேரும்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை ¼**
( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. - அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு மேன்மை ஸ்திதியை ஏற்படுத்தும். வாகன சுகம் திருப்தியளிக்கும். ஜனவரி 3உ முதல் புதன் மாறுதலால் அரிய பெரிய காரியங்களில் ஈடுபாடு ஆகும். வித்துவத்துவத்தில் புகழ்தரும். ஓர் புனிதஸ்தலம் சென்றுவருதல் ஆகும். செந்நெல் பிராப்தி பெருகும் புத்திரனுக்கு உயர்வு தரும். தாம்பத்தியவாழ்வில் சுமுகம் நிலவும் டிசம்பர் 17, 18, 22, 23, 29, 30, 31, ஜனவரி 1, 7, 8, 9, 10, 11 தேதிகளில் நல்லன ஏற்படும். ஜனவரி 2உ 7 நாழிகை 8 வினுடி முதல் 4உ 33 நாழிகை 21 வினுடி வரையில் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

**2. ரிஷபம் :- கார்த்திகை ¾ - உரோகிணி – மிருகசீர்ஷம் ½**
( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வு - வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாகநடக்கும். பணவருமானம் கண்யத்திற்கு ஏற்ப வந்துசேரும். வீடு வாகன பிராப்தியில் ஒப்பந்த விஷயங்களில் ஜனவரி 7உ முதல் நல்லன ஏற்படும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் பிரபலம் ஏற்படும் தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும் டிசம்பர் 16 19, 20, 24, 25, 31, ஜனவரி 1, 2, 3, 4, 9, 10, 11, 12, 13 தேதிகளில் தனுதாயம், நல்ல கௌரவம், குருவருள் தரும். ஜனவரி 4உ 33 நாழிகை 21 வினுடி முதல் 6உ 53 நாழிகை 48 வினுடி வரையில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ - திருவாதிரை – புனர்பூசம் ¾**
( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். பணவருமானம் வந்துகொண்டிருக்கும். பிறர் அவதூரு வார்த்தைகளினால்

சிறுதொல்லைவந்து நீங்கும், ஜனவரி 3உ முதல் வித்தியாவியாபாராதிகளில் எழுத்துமூல விஷயங்களில் நல்லன ஏற்படும், புத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும், மனைவிக்கு வெப்பாதிக்கத்தினுல் நலிவு ஏற்பட்டு உடன் குணமாகும் டிசம்பர் 16, 17, 18, 22, 23, 26, 27, 28, ஜனவரி 2, 3, 4, 5, 6, 11, 12, 13 தேதிகளில் நற்பலன் தரும். ஜனவரி 6உ 53 நாழிகை 46 விஞடி முதல் 9உ 8 நாழிகை 10 விஞடி வரையில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**
**( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )**

கடகராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும், பணவருமானம் காலக்கணக்கின்படிக்கு வந்துசேரும். பூமியில் இயந்திரசாதனங்களில் விருத்திபலன் தரும். எல்லாக்காரியங்களும் வெற்றிகரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கும் புதனின் அஸ்தங்கம் நீங்கியதும் ஜனவரி முதல் பிரபலஸ்திதியை உருவாக்கும். வீடுவாகனங்களில் நவீனம் ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 17, 18, 19, 20, 24, 25, 28, 29, 30, ஜனவரி 5. 6, 7, 8 தேதிகளில் தஞதாயம் ஊக்கம் எதிலும் சிறப்புதரும். ஜனவரி 9உ 8 நாழிகை 10 விஞடி முதல் 11உ 17 நாழிகை 44 விஞடி வரையில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$**
**( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )**

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பத்தில் பண வரவு செலவுகள் சரிசமஞக இருந்துவரும். டிசம்பர்மீ 20உ முதல் பூமியில் இயந்திரங்களில் நல்லன உருவாகும். வாகன சுகம் திருப்தியளிக்கும். ரோகம் நிவர்த்தியாகும். வழக்குகளில் ஜெயம் தரும். ஜீவனேபாயத்தொழில்கள் மேன்மைஸ்திதியில் விளங்கும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 19, 20, 21. 22, 26, 27, 31. ஜனவரி 1, 7, 8, 9. 10 தேதிகளில் தஞதாயாதி நற்பலன்களை அளிக்கும். ஜனவரி 11உ 17 நாழிகை44 விஞடி முதல் 13உ 24 நாழிகை 21 விஞடி வரையில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**
**( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )**

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பத்தில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். அடிக்கடி அவசிய செலவும் ஆகும். சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும் வீடுவாகன பிராப்தியில் நல்லன ஏற்படும். புத்திரனுக்குப் பிரமை

ஏற்பட்டு உடன் தெளியும், தாம்பத்திய வாழ்க்கை சாதாரணமாக நடந்துவரும். டிசம்பர் 16, 21, 22, 23, 24, 25, 29, 30 ஜனவரி 2, 3, 4, 9, 10, 11, 12 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களை அளிக்கும். டிசம்பர் 17உ 4 நாழிகை 9 வினுடி முதல் 19உ 10 நாழிகை 8 வினுடி வரையில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

**7. துலாம் :- சித்திரை ½ – சுவாதி – விசாகம் ¾**

**( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே. )**

துலாராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பத்தில் பண வருமானங்களை ஏற்படுத்திவரும். வஸதிர பூஷணங்களை அளிக்கும். ஓர் புனிதஸ்தலம் சென்று வருதல் ஆகும். ஜனவரி 3உ முதல் வித்தியா வியாபாராதிகளில் ஒப்பந்தங்களில் நல்லன ஏற்படும். இயந்திரவாகனங்களில் முதலீடு செய்யும். தாரபுத்திரர் களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 16, 17, 18, 19, 24, 25, 26, 27, 31 ஜனவரி 1, 5, 6, 9, 10, 11, 12 தேதி களில் தனுதாயாதி நன்மதிப்பைத்தரும். டிசம்பர் 19உ 10 நாழிகை 3 வினுடி முதல் 21உ 17 நாழிகை 54 வினுடி வரையில் சந்திராஷ் டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

**8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் – கேட்டை.**

**(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)**

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். பண வருமானம் வந்துகொண்டிருக்கும். சகோதரர் பந்துவினுல் அவசிய செலவுகளும் ஏற்படும். டிசம்பர் 20உ முதல் எல்லா காரியங்களையும் மனோவல்லமையில் செயல்படுத்தும். வித்துவுத்துவம் கலைத்துறை களில் அரசாங்க நன்மையை ஏற்படுத்தும். தாரபுத்திரர்களின் சௌக் கியம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 17, 18, 19, 20, 26, 27, 28, 29, 30 ஜனவரி 2, 3, 4, 7, 8 தேதிகளில் தனுதாயாதி நற்பலன் களை அளிக்கும். டிசம்பர் 21உ 17 நாழிகை 51 வினுடி முதல் 23உ 29 நாழிகை 28 வினுடி வரையில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

**9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் ¼**

**(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)**

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுகநடக்கும். நல்லவிதத்தில் பணவருமானம் வந்துகொண்டிருக்கும். சுபமானவற்றில் செலவும் ஆகும். சகோதரருக்கு நல்லஸ்திதி ஏற்படும். சரீரம் உஷ்ணபீடித

மாக இருக்கும். சில சந்தர்ப்பங்களில் ஆவேசநிலைமையை ஏற்படுத்தும். அதன்பாதிப்புகள் குருபார்வையால் நீங்கும். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். டிசம்பர் 19, 20, 21, 22, 28, 29, 30, 31, ஜனவரி 1, 5, 6, 9, 10 தேதிகளில் நற்பலன் தரும். டிசம்பர் 23உ 29 நாழிகை 28 விஞடி முதல் 25உ 46 நாழிகை 36 விஞடி வரையில் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் – அவிட்டம் $\frac{1}{2}$**
**(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)**

மகராரசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பத்தில் பண வருமானம் வந்துகொண்டிருக்கும். அடிக்கடி அவசர செலவையும் செய்யும். சகோதரத்துக்கு நல்லன ஏற்படும். வீடுவாகன பிராப்தியில் சௌகரியம் மேலிடும் தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். டிஸம்பர் 16, 22, 23, 24, 31 ஜனவரி 1, 2, 3, 4, 7, 8, 11, 12, 13, தேதிகளில் நற்பலன் தரும். டிஸம்பர் 25உ 46 நாழிகை 36 விஞடி முதல் 28உ 10 நாழிகை 3 விஞடி வரையில் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

**11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$**
**(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)**

கும்பராசி 6 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பத்தில் பண வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு இடம் மாறும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் எதிர்பார்த்திருந்த படிக்கு நன்மையேயளிக்கும். மாதப் பின்பகுதியில் வாகன பிராப்தி ஒன்று ஏற்படும். ஆண் மகவு ஒன்று ஏற்படும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். டிஸம்பர் 17, 18, 24, 25, 26, 27, ஜனவரி 2, 3, 4, 5, 6, 9, 10, தேதிகளில் தனுஆயாதி நற்பலன்களையளிக்கும். டிஸம்பர் 28உ 10 நாழிகை 9 விஞடி முதல் 30உ 38 நாழிகை 4 விஞடி வரையில் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

**12. மீனம் :- பூரட்டாதி $\frac{1}{4}$– உத்திரட்டாதி – ரேவதி.**
**(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)**

மீனராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். நல்ல தன வருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு மேன்மை ஸ்திதியையளிக்கும். வித்துவத்தில் தொழில் துறைகளில் விஷேச

பலன் தரும். வாகன சுகம் திருப்தியளிக்தும். பூமியில் செந்நெல் பிராப்தியில் விருத்திபலன் தரும். டிஸம்பர் 16, 17, 20, 21, 26, 27 29, ஜனவரி 5, 6, 7, 8, 11, 12, 13 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களை யளிக்கும். டிசம்பர் 30உ 38 நாழிகை 4 வினுடிமுதல் ஜனவரி 2உ நாழிகை 8 வினுடிவரையில் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.



---

**கடிதம்**

### T. SEVANTHILINGAM MUTHIRIAR HIGHER SECONDARY SCHOOL

Thanjavur Road, Varaganeri, Tiruchi - 8.

S. THAMBURAN,
Secretary & Correspondent. 22—11—80

* நமது தருமையாதீனத் திங்களிதழ் 'ஞானசம்பந்தம்' ஐப்பசித் திங்கள் இதழ் கிடைக்கப்பெற்றேன்.

அதன்கண் அடங்கியுள்ள மிகமுக்கிய சமுதாயத்திற்குத் தேவையான அமைப்பாக அமைக்கப்பட்டுள்ள ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணி மன்றமும் நோக்கமும் பணிகளும் கண்டு பெருமகிழ்ச்சியெய்தி உள்ளேன். திக்குத் தெரியாது நடுக்கடலில் பெரும் சூருவளியில் சிக்குண்டு பரிதவிக்கும் இந்து சமய மக்கள் மற்றும் பள்ளிகட்கு இது ஆதரவு என்ற துடுப்புபோன்று அமைந்துள்ளது என்பது எமதுமுடிவு.

தங்கள் ஆசியாலும் மக்கள் ஒத்துழைப்பாலும் ஸ்ரீ குருஞான சம்பந்தர் பணி மன்றம் சீரும் சிறப்பும் பெற்று இந்து சமயத்தை நாட்டில் வலிமையுடன் பீடு நடைபோட வைக்கும் என்பது திண்ணம்.

மேலும் பலபல பெயர்களில் இயங்கிவரும் சமய மன்றங்களை இதன்மூலம் ஒன்றுபடுத்தி இந்து சமயம் என்றால் அதற்கு ஒரு ஸ்ரீ குருஞானசம்பந்தர் பணி மன்றந்தான் என்ற நிலையை உருவாக்க மிகவும் வேண்டி விரும்பித் தங்கள் திருவடிகளை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன். ஒற்றுமையின் மூலந்தான் பிறசமயத்தாரோடு ஈடு கொடுத்து நமது இந்து சமய மக்களைக் காக்கமுடியும்.

உ

சிவமயம்

# மார்கழிமாதச் சிறப்பு நாட்கள்

16—12—80 செவ்வாய், தனுர்மாதபூஜாரம்பம். தருமை 11 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக சுவாமிகள் குருபூஜை.

18—12—80 வியாழன், சர்வ வைகுண்ட ஏகாதசி.

19—12—80 வெள்ளி, தருமை சண்முகர் கிருத்திகை அபிஷேகம். கிருத்திகை விரதம். பிரதோஷம்.

21—12—80 ஞாயிறு, பௌர்ணமிபூஜை. பின்னிரவு ஸ்ரீ நடராஜர் அபிஷேகம்.

22—12—80 திங்கள். ஆருத்ராதரிசனம், சீகாழியில் ஸ்ரீ உமாமகேசுவரருக்கு உச்சிக்காலத்தில் புழுகாப்பு. மாதபூஜையில் நெய் அபிஷேகம். சடையநாயனர் குருபூஜை.

24—12—80 புதன், தருமை 2 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக சுவாமிகள் குருபூஜை.

25—12—80 வியாழன், சங்கடஹர சதுர்த்தி, ஆயில்யவிழா.

28—12—80 ஞாயிறு, கர்ப்போட்டாரம்பம் 33-55, இயற்பகைநாயனர் குருபூஜை.

29—12—80 திங்கள், மஹாகாளாஷ்டமி, காலபைரவாஷ்டமி.

31—12—80 புதன், மானக்கஞ்சாறநாயனர் குருபூஜை.

3— 1—81 சனி, மஹாப்பிரதோஷம்.

4— 1—81 ஞாயிறு, மாதசிவராத்திரி

5— 1—81 திங்கள், சர்வ அமாவாசை.

6— 1—81 செவ்வாய். ஹனுமத் ஜெயந்தி, சாக்கியநாயனர் குருபூஜை.

10— 1—81 சனி, தனுர்வியதிபாதம், கர்ப்போட்டநிவர்த்தி 36-19.

11— 1—81 ஞாயிறு, கூடாரைவல்லி.

12— 1—81 திங்கள், வாயிலார் நாயனர் குருபூஜை.

13— 1—81 செவ்வாய், போகிப்பண்டிகை மகர-ரவி 52-0, திருக்கடவூர் ஸ்ரீ முனிசுவரபூஜை.



உ

சிவமயம்

தருமையாதீனத்தில்

இரண்டாவது குருமகாசந்நிதானம்

## ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா

தருமை ஆதீனத்தை நிறுவிய ஸ்ரீலஸ்ரீ குருஞான சம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் தம்மாணாக்கர் ஸ்ரீ ஆனந்தபரவச தேசிகருக்கு ஞானோபதேசம்செய்து ஞானபீடத்தில் அமர்த்தி ஜீவசமாதி நிலைக்கு எழுந்தருளினார்கள். ஸ்ரீ ஆனந்தபரவச தேசிகர் அதிதீவிர பக்குவராதலால் உபதேசம்பெற்ற அப்பொழுதே, தம் ஆசாரியரின் அருள்நிலையத்தைத் தரிசித்தவண்ணமே மேற்றிசையில் அமர்ந்து சமாதி கூடினார்கள். அடியார்கள் வேண்டுகோளுக்கு இணங்க ஜீவசமாதியிலிருந்த குருஞானசம்பந்த தேசிக சுவாமிகள் மீண்டும் எழுந்தருளிவந்து, அடுத்த மாணாக்கராகிய ஸ்ரீ சச்சிதானந்த தேசிகருக்கு ஞானோபதேசம் செய்தருளி ஞானபீடத்திலமர்த்தி, சமாதி கூடினார்கள்.

இவ்வண்ணம் ஞானானுபூதிமானாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் குருபூஜை விழா 24—12—1980 புதன் கிழமை தருமபுரம் மேல வீதியின் மேல்பால் அமைந்துள்ள குருமூர்த்த ஆலயத்தில் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெறும். காலை மாலை சமயச் சொற்பொழிவுகளும், திருமுறைப்பாராயணமும் நிகழும். அன்பர்கள் தரிசித்து, குருவருள் பெற்று உய்வார்களாக.

Printed & Published by V. Ramaiah Pillai, Manager, Dharmapuram at the Gnanasambandam Press Dharmapuram, Mayuram. 10-12-80